தில் பிறந்தேனாகிலும் பாபப்ரசுரனாய ஸம்ஸாரத்திலே அழுந்தா நின்றேன், எடுத்தருளவேணும் என்கிறார். உலகம் நிறைந்த புகழுடையவர்களும் சரீர சுத்தியும் அந்தஃகரண சுத்தியுமுள்ளவர்களும், யோகத்தில தேர்ந்தவர்களும் தத்வஸ்திதியை உணர்ந்தவர்களும், பரிமளத்தோடே அங்குரிக்கும் திருத்துழாய்போலே உன்னுடைய திருவடித்தாமரைகளில் இயற்கையான அன்பை நிரூபகமாகவுடையவர்களுமான ஸ்ரீமந்நாதமுனிகளுடைய திருவம்சத்தில் பிறந்துவைத்து, பாபங்களிலேயே புத்தியைச செலுத்திக்கொண்டு ஸம்ஸாரஸமுத்ரத்திலே இன்னமும் தரைகாணாமல் மூழ்கிக் கிடக்கின்றேன் என்றாராயிற்று. இப்படிப்பட்ட என்னை நீதானே நிர்ஹேதுக க்ருபையினால் கரைமரஞ் சேர்க்கவேணுமென்பது உள்ளுறை.

யுக்தாநாம் என்பதற்கு மூன்றுவகையாகப் பொருள் கூறுவர்; ஆத்மஸாக்ஷாத்காரமாகிற யோகத்திலே ஊன்றினவர்கள் என்றும், உன்னோடு நித்யஸம்பந்தத்தை விரும்பியிருப்பவர்கள் என்றும், ஒருகாலும் உன்னைவிட்டுப் பிரியாதவர்கள் என்றும்.

குணபுருஷதத்வஸ்திதி விதாம்=குணத்ரயாத்மகமான பிரக்ருதியைக் குணமென்பர்; புருஷன்—ஆத்மா; சேதநாசேதநங்களுடைய தத்வஸ்திதியை [உண்மை நிலைமையை] உணர்ந்தவர்கள் என்றும், சேதநாசேதநங்களாகிற தத்துவங்களின் ஸ்திதியை உணர்ந்தவர்கள் என்றும் உரைக்கலாம்.

சரணத!=அவரவர்களுக்குத் தகுந்த உபாயத்தைக் கொடுத்தருள்பவனே! என்கை. ... ... ... (௬௧)

𑌅𑌮𑌰𑍍𑌯𑌾𑌦𑌃 𑌕𑍍𑌷𑍁𑌦𑍍𑌰𑌶𑍍𑌚𑌲𑌮𑌤𑌿𑌰𑌸𑍂𑌯𑌾 𑌪𑍍𑌰𑌸𑌵𑌭𑍂𑌃
𑌕𑍃𑌤𑌘𑍍𑌨𑍋 𑌦𑍁𑌰𑍍𑌮𑌾𑌨𑍀 𑌸𑍍𑌮𑌰𑌪𑌰𑌵𑌶𑍋 𑌵𑌞𑍍𑌚𑌨𑌪𑌰𑌃 ।
𑌨𑍃𑌶𑌂𑌸𑌃 𑌪𑌾𑌪𑌿𑌷𑍍𑌠𑌃 𑌕𑌥𑌮𑌹𑌮𑌿𑌤𑍋 𑌦𑍁𑌃𑌖𑌜𑌲𑌧𑍇𑌃
𑌅𑌪𑌾𑌰𑌾𑌦𑍁𑌤𑍍𑌤𑍀𑌰𑍍𑌣𑌃 𑌤𑌵 𑌪𑌰𑌿𑌚𑌰𑍇𑌯𑌂 𑌚𑌰𑌣𑌯𑍋𑌃 ॥

அமர்யாத꞉ க்ஷுத்ரச் சலமதி ரஸூயாப்ரஸவபூ꞉
க்ருதக்னோ துர்மானீ ஸ்மரபரவசோ வஞ்சநபர꞉
ந்ருசம்ஸ꞉ பாபிஷ்ட꞉ கதமஹமிதோ து꞉கஜலதே꞉
அபாராதுத்தீர்ணஸ் தவ பரிசரேயம் சரணயோ꞉. (௬௨)

| | |
|---|---|
| அமர்யாத: | வரம்புமீறினவனும் |
| க்ஷுத்ர: | அற்ப விஷயங்க ளில் சாபல்ய முளளவனும் |
| சலமதி: | நின்றவா நில்லா நெஞ்சினை யுடையவனும |
| அஸூயா ப்ரஸவ பூ: | பொறாமைக்கு பிறப்பிடமான வனும |
| க்ருதக்ந: | நன்றி கெட்டவனும் |
| துர்மாநீ | துரஹங்கார முள்ளவனும் |
| ஸ்மரபரவச: | காமத்துக்கு வசப்பட்டவனும் |
| வஞ்சநபர: | பிறரை வஞ்சிப்பவனும் |
| ந்ருசம்ஸ: | கொடுந்தொழில் புரியுமவனும் |
| பாபிஷ்ட: | மஹாபாபியுமான |
| அஹம் | அடியேன் |
| இத: | இந்த |
| அபாராத | கரைகாணமுடியாத |
| து:க்கஜலதே: | துன்பக்கடலில் நின்றும் |
| உத்தீர்ண: | கரை சேர்ந்தவனாய் |
| தவ சரணயோ: | உனது திருவடிகளில் |
| கதம் பரிசரேயம் | எங்ஙனே கைங்கரியம் பண்ணப் பெறுவேன்? |

* * *—[அவதாரிகை.] கீழ்ச்லோகத்தில் பாபாத்மா என்று சுருக்கமாகச் சொன்னதை விவரித்துக்கொண்டு, இப்படிப்பட்ட மஹாபாபியான நான் உனது நிர்ஹேதுக க்ருபையினாலே கரையேறு விடில் வேறு வழி ஏது? கைங்கர்யத்தை இழந்தே போகவேண்டு மத்தனை என்கிறார். பத்து விசேஷணங்களால் தமது தாழ்வுகளை விஸ்தாரமாகச் சொல்லிக்கொள்ளுகிறார் இப்படிப்பட்ட சலோகங்களை மஹாபாபிகளான நாமெல்லோரும் அநுஸந்தித்து உஜ்ஜீவிப்போமாக ... ... ... (சுஉ)

𑌰𑌘𑌵𑌰 𑌯𑌦𑌭𑍂𑌸𑍍𑌤𑍍𑌵𑌂 𑌤𑌾𑌦𑍃𑌶𑍋 𑌵𑌾𑌯𑌸𑌸𑍍𑌯
𑌪𑍍𑌰𑌣𑌤 𑌇𑌤𑌿 𑌦𑌯𑌾𑌳𑍁𑌰𑍍𑌯𑌚𑍍𑌚 𑌚𑍈𑌦𑍍𑌯𑌸𑍍𑌯 𑌕𑍃𑌷𑍍𑌣 ।
𑌪𑍍𑌰𑌤𑌿𑌭𑌵𑌮𑌪𑌰𑌾𑌦𑍍𑌧𑍁𑌰𑍍𑌮𑍁𑌗𑍍𑌧 𑌸𑌾𑌯𑍁𑌜𑍍𑌯𑌦𑍋𑌽𑌭𑍂𑌃
𑌵𑌦 𑌕𑌿𑌮𑌪𑌦𑌮𑌾𑌗𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌤𑍇𑌽𑌸𑍍𑌤𑌿 𑌕𑍍𑌷𑌮𑌾𑌯𑌾𑌃 ॥

ரகுவர யதபூஸ்த்வம் தாத்ருசோ வாயஸஸ்ய
ப்ரணத இதி தயாளுர் யச்ச சைத்யஸ்ய க்ருஷ்ண
ப்ரதிபவ மபராத்துர் முக்த ஸாயுஜ்யதோபூ:
வத கிமபதமாகஸ் தஸ்ய தேஸ்தி க்ஷமாயா:. (சுங)

| | |
|---|---|
| ஹே ரகுவர! | ரகுவம்சத்தில் ஸ்ரீராமனாக அவதரித்தவனே! |
| த்வம் | நீ |
| தாத்ருச: வாயஸஸ்ய | அப்படிப்பட்ட [மஹாபராதியான] காகாஸுரன் விஷயத்திலே |
| ப்ரணத: இதி | 'இக்காகம் நம்மை வணங்கிறது' என்பதே கொண்டு |
| தயாளு: யத் அபூ: | தயைபண்ணினாயிறே; |
| முக்த! க்ருஷ்ண! | குற்றமறியாத கண்ணபிரானே! |
| ப்ரதிபவம் | பிறவிதோறும் |
| அபராத்து: | அபராதம் பண்ணின |
| சைத்யஸ்ய | சிசுபாலனுக்கு |
| ஸாயுஜ்யத: அபூச்சயத | ஸாயுஜ்யமளித்தவனாகவும் ஆனாயிறே; |
| தஸ்ய தே | அப்படியெல்லாம் செய்தவனான உன்னுடைய |
| க்ஷமாயா: | பொறுமைக்கு |
| அபதம் | இலக்காகாத |
| ஆக: | குற்றம் |
| கிம் அஸ்தி | என்ன இருக்கிறது? |
| வத | அருளிச்செய்ய வேணும். |

[illegible]—[ரகுவர.] கீழே உம்முடைய பாபங்களை நீர் தாமே சொல்லிக்கொண்டீர்; இவ்வளவு பாவங்கள் நிறைந்திருக்கின்ற வும்மை எங்ஙனே அநுக்ரஹிக்க முடியும்? என்று எம்பெருமான் திருவுள்ளமாக, காகாஸுரனுடைய அபராதத்தினும் சிசுபாலனுடைய அபராதத்தினும் மிக்க அபராதம் உலகிலுண்டோ? அவற்றைப் பொறுத்தருளின வுனக்குப் பொறுக்க முடியாததுண்டோ வென்கிறார்.

வநவாஸ காலத்தில் சித்ரகூட மலைச்சாரலிலே இராமபிரானும் பிராட்டியும் ஏகாந்தமாக இருக்கிற ஸமயத்தில் இந்திரன் மகனான ஜயந்தன் பிராட்டியினழகைக்கண்டு மோஹித்து அவளைத் தான் ஸ்பர்சிக்க வேண்டுமென்னும் தீயகருத்தினனாய்த் தேவவேஷத்தை மறைத்துக் காகவேஷத்தைப் பூண்டுகொண்டு வந்து, பிராட்டியின் மடியிலே பெருமாள் பள்ளிகொண்டருளுகையில் தாயென்றறியாதே பிராட்டியின் திருமார்பினில் குத்த, அவ்வளவிலே பெருமாள் உணர்ந்தருளி அதிக கோபங்கொண்டு ஒரு தர்ப்பத்தை யெடுத்து அதில் ப்ரஹ்மாஸ்த்ரத்தைப் பிரயோகித்து அதனை அந்தக் காகத்தின்மேல் மந்தகதியாகச் செலுத்த, அக்காகம் அந்த அஸ்த்ரத்துக்குத் தப்பி வழிதேடிப் பலவிடங்களிலும்

ஓடிச்சென்று சேர்ந்தவிடத்தும் ஒருவரும் ஏற்றுக் கொள்ளாமை யாலே மீண்டும் பெருமானையே சரணமடைய, அப்பெருமான் அருள்கொண்டு அக்காகத்துக்கு உயிரைக்கொடுத்து அந்த அஸ்த்ரம் வீண்படாமல் காகத்தின் ஒரு கண்ணை அறுத்தவளவோடு விடும்படி செய்தருளினனென்ற வரலாற்றில காகாபராதத்தை க்ஷமித்தருளினமை விளங்கும் தலையறுக்காமல் உயிரோடுவிட்டது க்ஷமாகார்யமிறே

சிசுபாலன் பிறந்தபொழுது நான்கு கைகளையும் மூன்று கண்களையுமுடையனாயிருந்தான்; அப்பொழுது அனைவரும் இது என்னவென்று வியக்கும்போது, ஆகாயவாணி "யார் இவனைத் தொடுகையில் இவனது கைகளிரண்டும் மூன்றும் விழியும் மறையுமோ, அவனால் இவனுக்கு மரணம்" என்று கூறிற்று அவ்வாறே பலரும் தொடுகையில மறைபடாத கைகளும் கண்ணும் கண்ண பிரான் தொட்டவளவிலே மறைபட்டன; அதனால் 'இவனைக் கொல்பவன் கண்ணனே' என்றறிந்த இவன் தாய் 'யாது செய்யினும் என் மகனைக் கொல்லலாகாது' என்று கண்ணனை வேண்ட, அந்த அத்தையின் நன்மொழிக்கு ஒருசார இணங்கிய கண்ண பிரான் 'இவன் எனக்கு நூறு பிழை செய்யுமளவும் இவன் பிழையை நான் பொறுப்பேன்' என்று கூறியருளினன். பின்பு சிசுபாலன், தனக்குக் கண்ணன் சத்துரு வென்பதை இளமையிலேயே அறிந்து அதனாலும் பூர்வஜந்மவாஸநையாலும் வளர்ந்த மிக்க பகைமையைப பாராட்டி, எப்பொழுதும் அப்பெருமானுடைய திவ்யகுணங்களையும் திவ்யசேஷ்டிதங்களையும் நிந்திப்பதே தொழிலாக இருந்தான் இவனுக்கு மணஞ்செய்து கொடுப்பதென்று நிச்சயித்திருந்த ருக்மிணியைக் கண்ணன் வலியக் கவர்ந்து மணஞ்செய்துகொண்டது முதல இவன் கண்ணனிடத்து அளவு கடந்த வைரங்கொண்டனன். பின்பு இந்த்ரப்ரஸ்த நகரத்தில நடந்த ராஜஸூய யாகத்தில் தர்மபுத்திரனால் கண்ணபிரானுக்கு அக்ரபூஜை செய்யப்பட்டதைக் கண்டு அளவிறந்த வசைச்சொற்களைப்பிதற்றி அதுபற்றிக கண்ணனது சக்ராயுதத்தால் தலை துணிக்கப்பட்டு இறந்து தேஜோமயமான திவ்ய சரீரம் பெற்று எம்பெருமானது திருவடியை அடைந்தனன் என்பது சிசுபால

வ்ருத்தாந்தம் இவ்வளவு மஹாபராதியான இவனுக்குப் பரம ஸாம்யரூபமான ஸாயுஜ்யத்தைக் கொடுத்தது க்ஷமாகார்யமிறே.

முதலடியில் ரகுவர ! என்று ஸம்போதநமாயிருப்பது போலவே இரண்டாமடியின் முடிவிலும் க்ருஷ்ண ! என்று ஸம்போதநமாகவே யிருக்கலாமென்பது பலருடைய கொள்கை. க்ருஷ்ண: என்று ப்ரதமாந்தமாக உரைப்பாருமுளர் க்ருஷ்ணனாகி என்றபடி.

தாத்ருச என்பது 'தாத்ருக்' சப்தத்தின்மேல் ஷஷ்டீவிபக்தி. "யஸ்ய சைத்யஸ்ய" என்ற பாடம் அசுத்தம் ப்ரதிபவம்=இவ்வண்டத்திற்கு உட்பட்ட வைகுண்டலோகமென்று பெயருள்ள பகவல் லோக விசேஷத்தில் திருவாசல்காக்கும் கைங்கரியத்திலே யிருந்த இருவர் ஒரு மஹர்ஷியின் சாபத்திற்குப் பாத்திரமாகி இந்தப்பூமியில் பகவத்விரோதிகளாக மூன்று பிறவி பிறந்தார்களென்றும் மூன்றுவது பிறவியின் இறுதியில் அவர்களுக்கு எம்பெருமான் மோக்ஷமளித்தனனென்றும் புராணங்கூறும். சிசுபாலன் அவ்விருவர்களுள் ஒருவன். இந்த ஜந்மம் அவனுக்கு மூன்றுவது காகாஸுரன் ஒரு பிறவியில் ஒரு தடவை அபசாரப்பட்டான்; இவனோ மூன்று பிறவிகளிலும் இடைவிடாது அபராதம் செய்தவன்; இப்படிப்பட்டவனுக்கும் முக்தியளித்தது உனது அளவற்ற க்ஷமாகுணத்தை ஆவிஷ்கரிக்கின்றதென்றபடி. ஸாயுஜ்யமாவது பரமஸாம்யரூபமான மோக்ஷம். "கேட்பார் செவிசுடு கீழ்மை வசவுகளேவையும், சேட்பால் பழம்பகைவன் சிசுபாலன், திருவடி தாட்பாலடைந்த தன்மை" என்ற திருவாய்மொழி [7-5-3] காண்க. ... ... ... (௬௩)

ந நு ப்ரபந்நஸ் ஸக்ருதேவ நாத
தவாஹமஸ்மீதி ச யாசமாந:।
தவாநுகம்ப்ய: ஸ்மரத: ப்ரதிஜ்ஞாம்
மதேக வர்ஜம் கிமிதம் வ்ரதந்தே ॥

நநு ப்ரபந்நஸ் ஸக்ருதேவ நாத
தவாஹமஸ்மீதி ச யாசமாந:
தவாநுகம்ப்ய: ஸ்மரத: ப்ரதிஜ்ஞாம்
மதேக வர்ஜம் கிமிதம் வ்ரதந்தே (௬௪)

நநாத! ஸ்வாமிந்!,
அஹம் ஸக்ருதேவ ப்ரபந்ந: இதி — 'நான் ஒருகால் பரபத்தி பண்ணினவன்' என்றும
அஹம் தவ அஸ்மி இதி ச — 'நான் உனக்கே உரிமைப்பட்டிருக்கிறேன்' என்றும (சொல்லிக்கொண்டு)
யாசமாந: அஹம — (கைங்கர்ய புருஷார்த்தத்தைப்) பிரார்த்திக்கின்ற அடியேன்
ப்ரதிஜ்ஞாம் ஸ்மரத: தவ — (அன்று நீ கடற்கரையில் விபீஷணாழ்வானுக்குப் பண்ணின) பிரதிஜ்ஞையைத் திருவுள்ளத்திலே கொண்டிருக்கிற உனக்கு
அநுகம்ப்ய: — அருள் புரிய உரியேன;
தே இதம் வ்ரதம் — உனது இந்த விரதமானது
மத்ஏக வர்ஜம் கிம — என்னொருவனைத் தவிர்த்தோ?

* * * —[ந நா॒஥ெ௰ஂநாஂவ ந்ந:.] காகாஸுர சிசுபால பரப்ருதிகள் திறத்திலே பொறுமையைச் செலுத்திக் காரியஞ்செய்தாற்போலே அடியேன் திறத்திலும் செய்தருளவேணுமென்ற ஆளவந்தாரை நோக்கி எம்பெருமான் 'நீர இப்படி சொல்லலாமோ? ஸ்வதந்த்ரரான நாம் சிலர் திறத்தில் ஒன்றைச் செய்தால் அதுவே அனைவர்க்கும் பொதுவாக ஆயவிடுமோ? அது என் இஷ்டத்தைப் பொறுத்ததன்றோ' என்றருளிச் செய்ய,—அது கிடக்கட்டும்; விபீஷணசரணாகதி ப்ரகரணத்திலே கடற்கரையிலே ஸர்வஸாதாரணமாக தேவரீர் பண்ணின ப்ரதிஜ்ஞை பொய்யோ? அதனை மறந்துவிட்டதோ? என்னொருவனை மாத்திரம விலக்கியே அந்த "ஸக்ருதேவ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே—அபயம் ஸர்வபூதேப்யோ ததாம்யேதத் வ்ரதம் மம" என்ற பிரதிஜ்ஞை செய்தருளிற்றோ? என்கிறார்

அன்று தேவரீர் செய்தருளின பிரதிஜ்ஞையை ஸ்மரிக்கப்பெறறால அடியேனை அநுக்ரஹித்தே தீரவேண்டியதாகும்; ஏனென்றால், தேவரீர் சொல்லியிருப்பதாவது—'ஒருகாலேசரணாகதி அடைபவனுக்கும் உனக்கே நாமாட்செய்வோமென்று பிரார்த்திப்பவனுக்கும் அபயமளிக்கிறேன்; இது எனது கடமை' என்று பிரதிஜ்ஞை செய்திருக்கிறது அப்படியே நான் செய்து தலைக்கட்டியாயிற்று; "த்வத்பாதமூலம் சரணம ப்ரபத்யே" என்று ஸக்ருத்ப்ரபதநம் பண்ணினேன்; "கதாஹமைகாந்திக நித்யகிங்கர: ப்ரஹர்ஷயிஷ்

யாமி" என்று * தவாஸ்மீதியாசநமும்பண்ணினேன் ; இரண்டுமான பின்பு இனி தேவரீருடைய "அபயம் ததாமி" என்ற பிரதிஜ்ஞை பலிக்கவேண்டியதேயன்றோ. "கோப்ராஹ்மணேப்யச் சுபமஸ்து நித்யம் கோபாலராமன் பசு நீங்கலாக" என்றாற் போலே, ஆளவந்தார் தவிர மற்ற பேர்கட்குத்தான் அபயப்ரதாநஸங்கல்பம் பலிக்கவேண்டியதென்று திருவுள்ளம்பற்றியிருக்கிறதோ? என்று சமத்காரமாகக் கேட்கிறார்.

[illegible] ... (சுச)

𑌅𑌕𑍃𑌤𑍍𑌰𑌿𑌮𑌤𑍍𑌵𑌚𑍍𑌚𑌰𑌣𑌾𑌰𑌵𑌿𑌨𑍍𑌦
𑌪𑍍𑌰𑍇𑌮𑌪𑍍𑌰𑌕𑌰𑍍𑌷𑌾𑌵𑌧𑌿𑌮𑌾𑌤𑍍𑌮𑌵𑌨𑍍𑌤𑌮𑍍 ।
𑌪𑌿𑌤𑌾𑌮𑌹𑌂 𑌨𑌾𑌥𑌮𑍁𑌨𑌿𑌂 𑌵𑌿𑌲𑍋𑌕𑍍𑌯
𑌪𑍍𑌰𑌸𑍀𑌦 𑌮𑌦𑍍𑌵𑍃𑌤𑍍𑌤𑌮𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑌿𑌤𑍍𑌵𑌾 ॥

அக்ருத்ரிமத்வ ச்சரணாரவிந்த
ப்ரேம ப்ரகர்ஷாவதிமாத்ம வந்தம்.
பிதாமஹம் நாதமுநிம் விலோக்ய
ப்ரஸீத மத்வ்ருத்த மசிந்தயித்வா (சுரு)

| | |
|---|---|
| மத் வ்ருத்தம் | எனது நடவடிக்கையை |
| அசிந்தயித்வா | கணிசியாமல், |
| அக்ருத்ரிம தவத் சரணாரவிந்த ப்ரேம ப்ரகர்ஷ அவதிம் | உனது திருவடித் தாமரையில் உண்மையாக வுண்டான பரமபக்திக்கு எல்லை நிலமாயிருப்பவரும் |
| ஆத்ம வந்தம் | ஆத்ம ஸ்வரூபத்தை உள்ளபடி உணர்ந்தவரும் |
| பிதாமஹம் | எனக்குப் பாட்டனுமாகிய |
| நாதமுநிம் | ஸ்ரீமந்நாதமுனிகளை |
| விலோக்ய | கடாக்ஷித்து |
| ப்ரஸீத | (அடியேனை) அநுக்ரஹித்தருளாய். |

* * *—[அக்ருத்ரி.] எம்பெருமான் தம்மை அநுக்ரஹித்தருளவேணுமென்பதற்கு ஒவ்வொரு ச்லோகத்தில் ஒவ்வொரு ஹேதுவையருளிச் செய்தார் கீழ் ; அந்த ஹேதுக்களெல்லாம் உபயோகமற்றவை என்னும்படியாக உத்தமோத்தமமான ஒரு ஹேது

நினைவுக்கு வந்தது ; ஸ்ரீமந்நாதமுனிகளுக்கும் தமக்கும் ஏற்பட்டிருக்கிற தேஹஸம்பந்தமும் ஆத்மஸம்பந்தமும் எம்பெருமான் தம்மை விஷயீகரிப்பதற்கு முக்கியமான ஹேதுவாதலால் அதனை இந்த ச்லோகத்தால் விண்ணபபம் செய்கிறார்!

இந்த ஸ்தோதரராரம்பத்தில் "தஸ்மை நமோ மதுஜிதங்க்ரி ஸரோஜதத்வஜ்ஞாநாநுராக மஹிமாதி சயாந்தஸீம்நே—நாதாய நாதமுநயே" என்று அருளிச் செய்ததை இதில் முன்னடிகளால் அநுவதிக்கிறா கபடமற்றதும் அளவற்றதுமான பகவத்பக்தி நிறைந்தவா ஸ்ரீமந்நாதமுனிகள என்றபடி ஆத்மவந்தம்என்பதற்கு ஜிதேந்த்ரியர் என்றும், ஸத்தை பெறறவா என்றும் பொருள் கொள்வர் அப்படிபபட்ட மஹான் அடியேனுக்குப் பாட்டனாராகவும் வாய்த்தார் என்கிறார் பிதாமஹம் என்று. நாதமுனிகளின் திருக்குமாரர் ஈசவரபட்டாழ்வாா ; அவருடைய திருக்குமாரர் ஆளவந்தார் என்றிறே பரம்பரை. இநத பிதாமஹத்வம் வித்யையாலும் ஜந்மத்தாலும் என்றணர்க ; இரண்டுவகையான ஸம்பந்தமும் அமைந்திருக்கையாலே.

அப்படிப்பட்ட நாதமுனிகளைக் கடாக்ஷித்து என் மீது இரங்கியருளவேணும் என்றது—அவருடைய ஸம்பந்தம் பெற்றிருக்கிற இவன் அந்த ஸம்பந்தமே காரணமாக நம்மால் அநுக்ரஹிக்கத்தக்கவன் என்று திருவுள்ளம்பற்றவேணும் என்றபடி. அநுக்ரஹிப்பதற்கு அந்த ஸம்பந்தம் பற்றாசு ஆகிறாப்போலே நிக்ரஹிப்பதற்கு என்னுடைய பாவங்கள் காரணமாகக் கூடியவையாயினும் இவற்றைக் கணிசியாமல அந்த மஹத்ஸம்பந்த மொன்றையே நோக்கியருள வேணுமென்கிறார் மத்வ்ருத்த மசிந்தயித்வா என்று.

இவர்தாம் தம்மை அநுக்ரஹித்தருள வேணுமென்பதற்கு ஹேதுவாகக் கீழ் ச்லோகங்களிற் சொன்னவற்றுக் கெல்லாம் எம்பெருமான் ஒவ்வொரு கண்ணழிவு சொல்லிவிடக்கூடுமாயினும் இப்பெரிய விஷயத்திற்குச் சொல்லலாவதொரு மறுமாற்றம் ஈச்வரன் றனக்குமில்லாமையாலே ' அப்படியே அநுக்ரஹித்தோம் '

என்று சோதிவாய் திறந்து அருளிச்செய்யவே, இவரும் மநோரதம் தலைக்கட்டப்பெற்று ஸ்தோத்ரத்தையும் தலைக்கட்டியருளினாராயிற்று. ... ... ... (சரு)

[illegible]

"யத்பதாம்போருஹத்யாநவித்வஸ்தாசேஷகல்மஷ: ।
வஸ்துதாமுபயாதோऽஹம் யாமுநேயம் நமாமி தம் ॥"

ஆளவந்தார் திருவடிகளே சரணம்.

பெருமாள் கோயில் பிரதிவாதி பயங்கரம்
அண்ணங்கராசாரியர் இயற்றிய
'ரத்நப்ரபா' என்னும்
ஸ்தோத்ரரத்ந வியாக்கியானம்
முற்றுப்பெற்றது.

ஸ்ரீரஸ்து.



ஸ்ரீரஸ்து

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

# முடிவுரை.

# ஸ்தோத்ரவ்யாக்யாந சோதநம்.

---

ஆளவந்தார் ஸ்தோத்ரமென்னும் இந்த ஸ்தோத்ர ரத்நத்திற்குப் பூருவர்களில பலர் வியாக்கியானங்கள் அருளிச் செய்தார்களெனினும பெரியவாச்சான் பிள்ளை யருளிச்செய்த மணிப்ரவாள வியாக்கினமொன்றும, அதனைத் தழுவி ஸ்ரீமந்நிகமாந்த மஹா தேசிகன் அருளிசசெய்த ஸ்தோத்ர பாஷ்யமென்கிற ஸம்ஸ்க்ருத வியாக்கியானமொன்றும் ஆக இவையிரண்டுமே ப்ரசாரத்திலுள்ளவை

இவற்றுள், பெரியவாச்சான்பிள்ளை யருளிய வியாக்கியானம் விசேஷ விஸ்தாரமுடையதன்றியே யிருந்தாலும, ஸாரார்த்தங்கள் பலவற்றையும் உள்ளடக்கி அதிகம்பீரஸரணியிலே வித்வத்ரஸிக ஹ்ருதயங்கமமாக அருளிச் செய்யப்பட்டதாம். இந்த வியாக்கியானத்திலே தேசிகன் மிகவும் ஈடுபட்டிருப்பரென்னுமிடம் அவருடைய ஸ்தோத்ர பாஷ்யத்தில் ப்ரத்யக்ஷமும் புலப்படும். பெரியவாச்சான்பிள்ளை எவ்வெவ்விடங்களில் எந்தெந்த ப்ரமாணங்களை உதாஹரித்து எவ்வெவ்விதமான அர்த்த விசேஷங்களை அருளிச் செய்தாரோ, அவ்வவ்விடங்களில் அந்த ப்ரமாணங்களையே உதாஹரித்து அந்த அர்த்தங்களையே தேசிகன் வடமொழியாலே அருளிச் செய்துளர் என்பது ஆயாஸமின்றி அறியத்தக்கதே சிற்சில விடங்களில அதிகப்படியாக ப்ரமாணங்களை விஸ்தரித்தும் யோஜநாபேதங்களைக் கூட்டியுரைத்தும் வைசத்யங்கள் பண்ணிவைத்திருக்கிறரென்பதும் உள்ளதே பெரும்பாலும பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியானத்தைத் தழுவியே பாஷ்யமிட்டருளினர் என்பது நிர்விவாதம். ஸ்ரீபிள்ளை பக்களிலே தேசிகன் வஹித்திருக்கும் கௌரவபுத்தி பாஷ்யப்ரக்ரியையிலே விளங்குவதுமன்றியில்,

யதிராஜ ஸப்ததியில் ஆளவந்தார் விஷயமாகத் தாம அருளிசசெய்த "விநாஹெ யாமுநமுநிஂ வாயமுகமஜாவநெ ஹிதம் । நிரஞ்ஜிஹ்மமஸ்யெ கருஷ்ணமுநிநா॥" என்ற சலோகத்திலும் நன்கு விளங்கும பெரியவாசசான் பிள்ளைக்கு ஸ்ரீக்ருஷ்ண பாதர் என்றிறே திருநாமம; உதாஹ்ருத சலோகத்தில் 'க்ருஷ்ண:' என்றது இவா தமமைக் கருதியே யென்று ஸ்ரீவரதகுரு வியாக்கியானித்தருளினர் "ஹோத்ரத்வாவாநமெ யாமுந நள க்ஷமாஹாரெ ஹி ஸ்ரீ கருஷ்ணஸூரி:" என்பது அவ்விடத்து வாக்கியம் சிலர் கண்ணபிரானென்றே பொருள் கொண்டு ஐதிஹ்யபுரஸ்ஸரமாக வியாககியானிப்பர்களாயினும், ச்லிஷ்டமான இவ்விடத்திறகு ஸமாநார்த்தம் கொள்வதிற்காட்டிலும் வ்யக்திபேதப் பொருள் கொள்வதே ஏற்குமென்று வரதகுரு விவக்ஷிதம்

பிள்ளை பக்கலிலே தேசிகனுக்கு கௌரவப்ரதிபத்தி கனத்திருக்கச செய்தேயும ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரவிருது வஹிப்பதற்குச் சேர எமபெருமானார் முதலானோருடைய ஸ்ரீஸூக்திகளேயும க்ஷுக்ஷு குறையப பேசுங்கணக்கிலே இவருடைய ஸ்ரீஸூக்திகளேயும் ஒன்றிரண்டிடங்களிலே குறையபபேசுமிடமும ஸ்தோத்ர பாஷ்யத்திலே காண்பதுண்டு அவவிடங்களில் பராமாணிகர் செய்யவடுப்பதென்னெனில்; ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் தத்வத்ரயசிந்தநாதிகாரத்திலே—"தர்க்க பாண்டித்யத்தாலே நாம் நினைத்த தெல்லாம் ஸாதிக்கவல்லோம்" என்றருளிச்செய்த ஸூக்தியை யநுஸந்தித்து ஆறியிருக்க ப்ராப்தம். ப்ராமாணிகர் நிரூபிக்கப்புகுந்தால் பெரியவாச்சான் பிள்ளை திவ்ய ஸூக்திகளில் அநுபபத்தி அணுமாத்ரமும் நிற்மாட்டாதென்னுமிடம ஸர்வஸம்ப்ரதிபந்நம்.

ஸ்தோத்ர பாஷ்யத்தைத் தமிழில் மொழி பெயர்த்தெழுதிய ஸ்ரீ. உ. வே திருவஹீந்திரபுரம். பண்டிதபூஷணம சேட்லூர் நரஸிம்ஹாசார்ய ஸ்வாமி, அதன்முடிவில் "ஸ்ரீஸ்தோத்ர ரத்னத்தில் சில ஆக்ஷேப ஸமாதானங்கள்" என்ற மகுடமிட்டு, "இந்த ஸ்தோத்ரத்திற்கு பெரியவாச்சான் பிள்ளை மணிப்ரவாள ரூபமாக ஒரு வ்யாக்யானம் செய்தருளி இருக்கிறார். அந்த வ்யாக்யானத்திற்கும் ஸ்தோத்ர பாஷ்யத்திறகும சிற்சில இடங்களில் அபிப்ராய

பேதங்கள் ஏற்படுகின்றன" என்ற பீடிகையுடன் ஐந்தாறு விஷயங்கள் வரைந்துள்ளார். "ஸ்தோத்ர ரத்னத்தில் சில ஆக்ஷேப ஸமாதானங்கள" என்று மேலே கொடுத்த மகுடத்திற்கும அதன் கீழே வரைந்த விஷயங்கட்கும் யாதொரு ஸம்பந்தமும் காணேம். ஆக்ஷேபகர்த்தா யார? ஆக்ஷேபம எவ்விடத்திலுள்ளது? ஆக்ஷேப ப்ரகாரம்யாது? இத்யாதி ப்ரச்நங்கட்கு மறுமாற்றம கிடைப்பரிதே. ஆகையால அஸம்பத்த வாகயார்த்த மென்பது தலையெழுத்து கொண்டே அறிதியிடக்கூடியதாம இனி உள விஷயங்களிலும இறங்கி ஆராய்வோமாயின், எலலாம இத்தகைத்தேயென்பதை எளிதிலுணர்த்திறுமாவோம ஆகவே இந்த நிரூபணம் உபக்ரமிக்க நேர்ந்த தெமக்கு. மத்யஸ்தத்ருஷடிகள் இதனைப் பரிசீலித்துத் தெளியவடுக்கும

## —முதல் விஷயம்.—

ஸ்தோத்ர ரத்நத்தில் நான்காம ச்லோகத்தில் "போகாபவர்க்க ததுபாயகதீ:" என்றவிடத்திற்கு வியாக்கியானஞ் செய்யுமிடத்து, பெரியவாச்சான் பிள்ளைக்கும தேசிகனுக்கும அபிப்ராயபேதம விளைந்திருப்பதுண்டு. கைவல்யாநுபவமென்னும ஆத்மாநுபவத்தை அபவர்க்க பதத்திற்கு அர்த்தமாக உரைததருளினர் பெரியவாச்சான் பிள்ளை அதறகு முந்தின ஹோம பதத்திற்கே அது அர்த்தமென்றார் தேசிகன் இஃது உண்மையே ஆத்மாநுபவம மோக்ஷமன்றெனறும, மீட்சியுண்டென்றும, ஆகவே இது அநித்ய புருஷார்த்தமென்றும ஸ்ரீமந்நிகமாநதமஹா தேசிகனுடைய திருவுளளம் நாதயாமுநயதிவராதிகளின் திருவுளளம் இதில வேறுபட்டதே. ஆத்மாநுபவமென்பது மீட்சியற்ற மோக்ஷமேயென்று அவர்கள் கொண்ட கொள்கையையே பெரியவாச்சான் பிள்ளையும் கொண்டு உரைத்தருளினர் நெடுநாளைய இவ்விவாத விஷயம கார்யாதிகரணவாதம் முதலிய திவயக்ரந்தங்களில் மிகத் தெளிவாக உபபாதிக்கப்பட்டிருக்கையாலே நாம இங்கு அதிக பரிசரமம் கொள்ள வேண்டாவாயிருந்தது

ஸ்ரீ தேசிகன் ந்யாயஸித்தாஞ்ஜநத்திலே இவவிஷயமாகச் சில சொல்லிக்கொண்டு போம்போது ஸ்ரீபாஷ்ய ஸூக்திகள் ஸ்வமதாநு

கூலங்களென்றும கீதாபாஷ்ய ஸூக்திகள் மாத்திரம் தம் கருத்துக்கு இணங்கவில்லையென்றும் திருவுள்ளம்பற்றி இறுதியாகச் சென்று

" [Grantha text]
[Grantha text]॥ "

என்ற வொருவாக்கியத்தினால் கீதாபாஷ்யஸூக்திகளுக்கு அஸ்வாரஸ்யம கல்பித்தருளினார். ஸ்ரீ பாஷ்யஸூக்திகளையும கீதா பாஷ்ய ஸூக்திகளையும ஒன்றோடொன்று வாசியற ஸமரஸமாக நிர்வஹிக்கப்போகாமையாலே அந்யதரக்ரந்தத்திற்கு அஸ்வாரஸ்யம அவசய கல்பநீயமாயிற்றென்று அர்வாசீநர் அபிமானிப்பார்கள்.

எம்பெருமானார் ஸ்ரீபாஷ்ய கீதாபாஷ்யங்களில் அருளிச்செய்த திருப்பவை அஸ்வாரஸ்யலவலேசமின்றிக்கே நமக்கு பொருந்தும் படியை நிரூபிப்போம காணமின் ;—

கீதாபாஷ்யத்தில — பஞ்சாகநிவித்யாநிஷ்டனை கேவலனுக்கு [Grantha text]த்தையும், [Grantha text]தையும [Grantha text]யையும [Grantha text]யையும் அருளிசசெய்தார். ஸ்ரீபாஷ்யத்தில—" [Grantha text]" என்ற ஸூத்ரவிவரணத்தில " [Grantha text]. " என்றருளிசசெய்த திருக்கையாலே கேவலனுக்கு ப்ரஹ்மப்ராப்தியாகிற பலன் ஸ்ரீபாஷ்யோக்தமாகத் தேறுகின்றது. ஆகவே, கீதாபாஷ்யஸூக்தியும் ஸ்ரீபாஷ்யஸூக்தியும பரஸ்பரவிருத்தம்போல் தோற்றும. இந்த விரோதத்தை விலக்கமுயன்ற வேதாந்த தேசிகன் மதுவித்யாந்யாயத்தை மநஸ்ஸிலே கொண்டு [Grantha text]த்தை அவாந்தரபலமாகவும ப்ரஹ்மாநுபவத்தை பரதாந பலமாகவும கல்பித்து நிர்வஹித்தார் இப்படி நிர்வஹிக்குமளவில் கீதாபாஷ்யஸூக்தியில் அஸ்வாரஸ்யம ஏறுகின்றது. அவ்வளவேயல்ல ; அவாந்தரபலனைக் கல்பிக்கவல்ல ப்ரமாணமும் துர்லபம. மதுவித்யாந்யாயம் இங்கே

ஸாதராம் அப்ரஸக்தம். ஸ்ரீஸஹஸ்ரநாமபாஷ்யத்தில “ முக்தாநாம் பரமா கதி: ” என்ற விடத்தில், “ பரமகதிவிசேஷேண முக்தாநாமேவ கைவல்யநிஷ்டாநாம் மதிமாத்ரே ” என்று பட்டரருளிச்செய்ததும், ஸ்ரீ வேதார்த்த ஸங்க்ரஹ தாத்பர்யதீபிகையில்—“பரம: புமர்த்தோ முக்தாநாம்த்யுச்யதே; அபரமஸேஷேண கைவல்யமோக்ஷவ்யாவ்ருத்தி:” [பக்கம் 256] என்று ச்ருதப்ரகாசிகா பட்டர் அருளிச்செய்ததும் பழுதாம். ஒரு விரோதமும் வாராதபடி நிர்வஹிக்கும் வழி ஏதென்னில்; கேண்மின்:—

வ்யக்திவியுக்தாத்மாநுபவமே கேவலனுக்கு ப்ரதாநபலன். இங்ஙனாகில், ப்ரஹ்மப்ராப்தியை ப்ரதிபாதியாநின்ற ஸ்ரீ பாஷ்ய ஸூக்தி எங்ஙனே சேரும்? “ ப்ரஹ்மப்ராப்த்யநந்தரமாவ்ருத்திரஸ்யவர்ணாது” என்று ஸ்ரீபாஷ்யபங்க்தியன்றோவென்னில்; ஆம்; அங்கு அடுத்தபடியாகவே “ அதஏவ தத்க்ரதுந்யாயாச் ச வ்யக்திவிநிர்முக்தப்ரஹ்மாத்மகஸ்வாத்மாநுஸந்தாநம் விஷ்ணோ: ” என்கையாலே, தத்க்ரதுந்யாயப்படியே ப்ரஹ்மாத்மகஸ்வாத்மப்ராப்தி தான் ப்ரஹ்மாத்மகஸ்வாத்மாநுபவமுமாகத்தகும். ஆகவே, விசேஷணதயா ப்ரஹ்மண: ப்ராப்யத்வம் தேறுகையாலே ப்ரஹ்மப்ராப்தி சொன்னது பொருந்தும்.

இப்படி ப்ரஹ்மப்ராப்தியுமுண்டாகில 1 “ இறுகலிறப்பெனனும் ஞானிக்குமப்பயனில்லையேல்” என்றும், 2 “ ஆத்மாநுபூதிரிதி யாகிலமுக்திருக்தா ஸாபிக்ஷ்ய [illegible] ஜஹ்யேஷ ” என்று மித்யாதிப்ரமாணங்களாலே கைவல்யமோக்ஷத்துக்கு அபகர்ஷம் விளங்குவது எங்ஙனே சேருமென்னில; ப்ரஹ்மாநுபவம் அப்ரதாநமாகவும் ஆத்மாநுபவம் ப்ரதாநமாகவுமுள்ளமையாலே அபக்ருஷ்டமென்கிறதத்தனை

இனித்தான், ஸக்ருத்விநிவ்ருத்திக முண்டான பின்பு பரமாத்மாநுபவம் ப்ரதாநமாக ப்ராப்தமாயிருக்க, இப்படி சொல்லுகைக்கு நியாமகமேதென்னில் ; தத்க்ரதுந்யாயமேயாய்த்து இதற்கு

1. திருவாய்மொழி 4—1. 10.
2. வரதராஜஸ்தவம்—81.

நியாமகம். ஸர்வகர்மவிநிர்மோகமுண்டானாலும் தத்க்ரதுந்யாயத்தாலே ப்ரஹ்மாநுபவத்துக்குப் பலமாக ப்ரஹ்மாநுபவத்தைத் தந்தருள்வதாக பகவத் ஸங்கல்பமாகையாலே, அந்த ஸங்கல்பமானது ப்ராயாநேரும் ப்ரஹ்மாநுபவத்தைக் குலைக்கும். ஆத்மாநுபவ ப்ராயாந்த்துக்கு ப்ரதிபந்தகமான அந்த பகவத் ஸங்கல்பத்துக்கும் ஸர்வகர்மவிநிர்மோகத்தோடு கூடவே விநிர்மோகம் உண்டாகாதோவென்னில்; பர்யங்காரோஹண ஸமயத்தில தான் தாத்ருஸஸங்கல்பம் நசிக்கிறதென்று அபியுக்தர் சொல்லிவைத்திருக்கையாலும், விரஜாநதியைக் கடந்தவுடனே கைவல்யமோக்ஷம் வழிக்கையாலும், அப்போது தாத்ருஸ ஸங்கல்பம் உள்ளபடியாலும் அப்ரதாந ப்ரஹ்மாநுபவமும் ப்ரதாந ஆத்மாநுபவமும் கூடாநின்றது

இப்படி நிர்வஹிக்கில ஸர்வம்ஸமஞ்ஜஸமாகிறது இங்ஙனன்றிக்கே, ப்ரக்ருதிவியுக்தாத்மாநுபவத்தை அவாந்தர பலனாகவும் ப்ரஹ்மாநுபவத்தை முக்கிய பலனாகவும் கலபிப்பது நிர்மூலமென்னுமளவேயல்ல, கீதாபாஷ்ய ஸூக்திக்கு அஸ்வாரஸ்யகல்பகமாகவும் முடிகின்றது பஞ்சாக்நி வித்யாநிஷ்டனுக்கு ப்ரஹ்மாநுபவநிஷ்டனும் அவ்யவதாநஸாக்ஷமும் ச்ருதப்ரகாசிகோக்தம்

ஜாபகோபாக்யானத்தில் வ்யவதாநவ்யாவ்ருத்தியானதை இங்கு நிதர்சிக்கவொண்ணாது. ஜாபகனுக்கு நேர்ந்த ப்ரஹ்மகாயநிவேஷவண் ரூபமான வ்யவதாநம் ஜிஹாஸாநிஷ்டனைப்பற்றியதுமென்று உணரக்கடவது

இவ்விஷயத்தில் இவ்வளவு எழுதுவதே ஸாரம். ஸாரக்ராஹிகளாயிருப்பார் இவ்வளவில்தானே தெளியக்கடவர்கள். ஆகவே பெரியவாச்சான்பிள்ளை ஆத்மாநுபவத்தை அபவர்க்க பதார்த்தமாக உரைத்தருளினது பொருத்தமுடைத்தே.

க்ருதப்ராயஸ்சித்தா ஸ்வாநுவா ஸ்வாக க்ருதப்ராயஸ்சித்தா ஸ்வாநுவா ஸ்வாக। கஷாயஸ்வம் ப்ராஹ யதிஸிகேஸ்வர ஸீதாஸரேஷு, தநகூஷ்தீவ ॥ என்று ஸம்பரதாய ஸித்தாஞ்ஜநத்திலே சொலலிவைத்தோம்

இந்த கைவலய மோக்ஷத்தின் ஸ்தாநவிசேஷ நிர்ணயத்திலும் விப்ரதிபத்தி கொள்ளக் காணுகின்றோம் இது தன்னில் சொல்ல வேண்டிறறென்னென்னில்; ஸசரிதரக்ஷையில் த்வாதசோர்த்வ புண்ட்ரங்களுக்கு ஸ்தாநங்கள் காட்டிவரும் ப்ரகரணத்திலே திரிவிக்ரமத் திருமண்காப்புக்கும் ஹ்ருஷீகேசத் திருமண்காப்புக்கும் "ஸ்கந்தயோஶ்ச" என்றும், "ஹ்ருஷீகேஶம் தத꞉ஸ்கந்தே" என்றும், "ஜத்ருணஸ்த்வம் ஹ்ருஷீகேஶம்" என்றும் ஸ்கந்த சப்தத்தாலும் ஜத்ரு சப்தத்தாலும் ஸ்தாநநிர்தேசம் பண்ணியிருக்கக்கண்டவிவர்கள் 'வலக்கழுத்திலே, இடக்கழுத்திலே' என்று பொருளுரையாநின்றார்கள் ஸ்கந்தபதமும் ஜத்ருபதமும் எவ்விடத்தைச் சொல்லுமென்பதை அமரகோசங் கொண்டறியலாம அறிந்து வைத்தும், வஸித்தாந்திகளாதரித்த ஸ்தாநவிசேஷத்திற்கு ப்ரமாணமாய் விடுகிறதேயென்று வருந்திப் பதார்த்தத்தையே மாறுபடுத்தாநின்றார்கள். ப்ரத்யக்ஷ விஷயத்திலிவ்வளவானால், இனி பரோக்ஷ விஷயத்தில் கைசலியார்களிறே ப்ரத்யக்ஷபுண்ட்ர ஸ்தாநத்தை மாறுமவர்கள் பரோக்ஷமோக்ஷ ஸ்தாநத்தை மாறுதல வியப்பல்லவென்று விசராந்தராவுதோம்...... ...........*

## இரண்டாவது விஷயம.

"த்வதாச்ரிதாநாம்" என்கிற இருபதாம் ச்லோகத்தின் வியாக்கியானத்தில் நித்யமுக்தர்களின் ஜகத்காரணத்வவிஷயமாகப் பெரியவாச்சான்பிள்ளைக்கும் தேசிகனுக்கும் அபிப்ராயபேதமிருப்பதாகப் பகர்கின்றனர். இதனை ஆராயவோம்.

பெரியவாச்சான்பிள்ளையின் ஸ்ரீஸூக்தியாவது—"[த்வதாச்ரிதாநாம்]......தேவரை ஆச்ரயிக்கிற ப்ரஹ்மாதிகள் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களையும உபதேசக்ரமத்தாலே பெற்று ஸம்ஸாரவிமோசநத்தையும்பண்ண சக்தரானபின்பு, அநந்யப்ரயோஜநராய் ஆச்ரயிக்குமவர்கள் அவற்றைச் செய்யப் பார்த்தால் லீலையாகாநின்றது. முக்தர் தேவரோடே லீலாரஸமநுபவிக்கும்போது ஸங்கல்பஜ்ஞாநத்தாலே ஸ்ருஷ்டித்திறே அநுபவிப்பது; "ஸங்கல்பாதேவ தச்ச்ருதே꞉." "ஸங்கல்பாதேவாஸ்ய பிதர꞉ ஸமுத்திஷ்டந்தி॥" ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளில் ப்ராப்தியில்லாமை யோக்கி சக்தி

யில்லாமையாலே தவிருகிறாரல்லர் . ...“ஜகத்வ்யாபார வர்ஜம்” “போகமாத்ரஸாம்யலிங்காச்ச.”—என்பதாம். இதனை தேசிகன் கண்டித்திருக்கிறாராம் இருக்கட்டும்; விஷயத்தை விமாசிப்போம்.

வேதாந்த சாஸ்த்ரத்தில நித்யமுக்தர்களுக்கு ஒருவகையான ஜகத்ஸ்ருஷ்டி அங்கீகரிக்கப்பட்டும் மற்றொருவகையான ஜகத்ஸ்ருஷ்டி நிராகரிக்கப்பட்டுமிராநின்றது. அங்கீகரிக்கப்பட்ட ஸ்ருஷ்டி யாதெனில்; சாந்தோக்யோபநிஷத்தில எட்டாவது ப்ரபாடகத்தில இரண்டாவது கண்டத்தில்—“ஸ யதி பித்ருலோககாமோ பவதி ஸங்கல்பாதேவாஸ்ய பிதர: ஸமுத்திஷ்டந்தி தேந பித்ருலோகேந ஸம்பந்நோ மஹீயதே” என்று தொடங்கிய பத்து வாக்கியங்களால் ஒரு ஸ்ருஷ்டிசக்தி சொலலப்படடிராநின்றது. ஸத்யஸங்கல்பத்வப்ரயுக்தமான இந்த ஸ்ருஷ்டிசகதியானது ப்ரஹ்மஸூத்ர—தத்பாஷ்யாதிகளாலும நிலைநாட்டபபட்டதேயாம். ஸங்கல்பாதிகரணமாகாணக தேசிகனும் அதிகரணஸாராவளியில “விஶ்வைஶ்வர்யம் தஸ்ய ஜந்மஸ்திதிமயரசநா விஶ்வகர்த்ருர்யயா ஸ்யாத் ஸ்வாதந்த்ர்யாஸங்காந் ஹேதோர்நியதிரிஹ ததா நித்யமுக்தக்ஷயாணாம்” என்ற ச்லோகத்தால இவ்வர்த்தத்தை அருளிசசெய்தார் இதைத் தான் பெரியவாச்சான்பிள்ளையும் த்வதாச்ரிதாநாமித்யாதிக்குப் பொருளாகவருளிச் செய்தார்

இனி, சாஸ்த்ரங்களில் நித்யமுக்தர்களுக்கு நிராகரிக்கப்பட்ட ஜகத்ஸ்ருஷ்டி யாதெனில; “ஜகத்வ்யாபாரவர்ஜம் ப்ரகரணாத் அஸந்நிஹிதத்வாச்ச” இதயாதி ப்ரஹ்மஸூத்ர—தத்பாஷ்யாதிகளில் இதன் விவரணம் காணத்தக்கது.

ஆக இவ்விரண்டு விஷயங்களிலும் பெரியவாச்சான் பிள்ளைக்கும் தேசிகனுக்கும் அபிப்ராய பேதமென்பது ஈஷத்துமில்லை. ஸ்ரீபாஷ்யாதிகளில் மறுக்கப்பட்ட ஜகத்காரணத்வத்தை நித்யமுக்தர்களுக்கு உண்டென்பார் ஆருமில்லை “ வளவேழுலகின்முதலாய” என்கிற திருவாய்மொழிப்பாசுரத்தை வியாக்யானித்தருளாநின்ற பெரியவாச்சான் பிள்ளை [இருபததினாலாயிரப்படியில்] “ முதலாய” என்ற விசேஷணத்தை வானோரிறைக்கு அந்வயித்து ஒரு யோஜனை அருளிச்செய்தபின், வானோர்க்கே அந்வயித்து மற்

ஒருரு யோஜனைபணிக்குமிடத்து, "நித்யஸூரிகளுக்கும் காரணத்வமுண்டோவென்னில்; அஸ்த்ரபூஷணாத்யாயத்தின்படியே ஸ்ரீ கௌஸ்துபத்தாலே ஜீவஸமஷ்டியை தரிக்குமென்றும் ஸ்ரீவத்ஸத்தாலே ப்ரக்ருதி ப்ராக்ருதங்களை தரிக்குமென்றுஞ் சொல்லுகிறது." என்றருளிச் செய்த ஸ்ரீஸூக்தியின் கருத்தையும் நோக்க வேணும்.

ஆனால், இவ்விஷயத்தில ஸ்வல்பமான அபிப்ராய பேதமுமுண்டு, எங்ஙனே யென்னில;—அஷ்டாதசரஹஸ்யங்களுள் ஒன்றான அர்த்தபஞ்சக மென்னும் ரஹஸ்யத்தில—"நித்யராவார்" என்று தொடங்கி "ஈச்வரநியோகாத் ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களைப் பண்ணவும் சக்தராய்" என்றருளிச் செய்யப்பட்டுள்ளது. இவ்வர்த்தம் சிலர்க்கு ருசிப்பதில்லை "ஜகத்வ்யாபாரவர்ஜம்" என்று வெட்டொன்று துண்டிரண்டான கணக்கிலே நிஷ்கர்ஷிக்கப்பட்ட பின் இங்ஙனே யொரு வாக்யார்த்தமுண்டோவென்று மருள்கொள்வர். "ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளில ப்ராப்தியில்லாமை போக்கி சக்தியிலலாமையாலே தவிருகிறாரலலர்" என்ற பெரிய வாச்சான்பிள்ளையின் ஸ்தோத்ரவ்யாக்யான ஸூக்தியின் மேல் தேசிகன் தாக்கவாதஞ் செய்யக்காணகிறோம் "கேவலதர்க்கங்களையிட்டு ப்ரமாணங்களை பாதிக்கலாகாது" என்றும், "தர்க்க பாண்டித்யத்தாலே நினைத்ததெல்லாம் ஸாதிக்கலாயிருக்கச் செய்தேயிறே நாம் ப்ரமாண சரணராய்ப் போருகிறது" என்றும் பேசுமவர் இங்கு [illegible] ஸ்ரீஸூக்தியிலே நிஷ்டரானதுஎன்னோ? முக்தர்களுக்கு 'பஹு ஸ்யாம்' என்கிற ஸங்கல்ப சக்தி உண்டானால்தான் ஜகத்ஸ்ருஷ்டியில் சக்தியுண்டாமென்றும், ஸர்வ சரீரித்வமுண்டானலதான் "பஹு ஸ்யாம்" என்கிற ஸங்கல்ப சக்தியுண்டாகுமென்றும் கூறுமவரின் கருத்து அறியோம். ஏதுக்கு இந்த ஆபத்திகள்? எம்பெருமானுக்குப் போலே இவர்களுக்கும் ஜகதுபாதாந காரணத்வாதிகள் உண்டென்று சொல்லவந்தார் ஆரேனுமுண்டோ? ஸம்ப்ரதிபந்நஸ்ரஷ்டாக்களான ப்ரஹ்மாதிகள் ஸர்வ சரீரித்வமும் 'பஹு ஸ்யாம்' என்கிற ஸங்கல்பசக்தியும் வாய்ந்தோ ஸ்ருஷ்டிப்பது? "[illegible]

உநவாயெ" என்ற தம்முடைய குல கூடஸ்தரான விசவாமித்ரபக வாந் ஸ்ருஷ்டித்ததும் இங்ஙனேயோ? இவர்தாமே ப்ரக்ருத ச்லோகபாஷ்யத்தில் "ஶவம்வா யொஜநா" என்று தொடங்கிச் செய்தருளின யோஜநையில் "ய்ஶாதெ்தாக்ஷிஹ தெஷாம் (ஸஂஹூாரஹூாதிநாம்) ஸவக்நூஹெண ஸஷ்டாஷெஃ வியத்ஸகாத்ஸவநாயகா" என்றதும் விஸ்ம்ருதமாயிற் றப போலும் எம்பெருமானுடைய நியமநமுண்டாகில் செய்யவல லார் என்னுநிறக, ஆகாசதாணடவஸஂஹாதரங்களான இந்த ஆபாதநஙகள் எங்கே விலைசெல்லும்?

"ஐஶஂ ஶாநவஶாவதஂ நாவதஂதெ" என்றும், "நவ வநராவதஂதெ" என்றும ஒரு புறத்திலும் "ஐஶாநுஶொகாநு காஶாநீகாஶஸ்வநூஸஶுநு" என்றும் "ஸவெஷொ கெஷ காஶவாரொஸவதி" என்றும மறறொரு புறததிலும ஓதி யிருந்தால, கர்மாதீநமான புநராவருத்தியிலலையென்று முந்தின சருதிகளால சொலலப்படுகிறதென்றும, ஸ்வசசந்தகைங்கர்யரூப மான அநுயாதராாத்தமாக நேரும் ஸாவலோகஸஞ்சாரம் பிந்தின ச்ருதிகளால சொல்லப்படுகிறதென்றும் ஸ்ரீபாஷ்யாதிகளில் நிர் வஹித்த கட்டளை இக்குமொகதும் ஈாரதீயமென்று ப்ரஸித்த மான ஹரிபக்திஸுதோதயத்தில ஐந்தாவது அதயாயததில் (66) "தெஹி கயயதீஹ்ஞி ஜமதூமஂஶயஎ ஸயஂ" என்று சொல்லியிருபபதையும, "தயாநிஸஷாதஸொண" என்று ஆளவந்தாரருளிச செயததையும், "ஸஸஂகஷ ஶாதூாவக்ஷஜ மஜநஷிதிஷஂஸாஜெக ஸ்ரீஶதி விஷெ்ஷநெ நூஷஸஶஷா ஒெதஷயஂ" என்று எம்பெருமானருளிசசெய்த ஸ்ரீவைகுண்ட கத்ய ஸூக்தியையும், இவையித்தனைக்குமடியாக விஷ்வக்ஸேந மந்த் ரத்தில் ‡ "விச்வஸ்ருஜே" என்றிருப்பதையும் மற்றும் பல ப்ர மாணஙகளையும் தழுவிய பெரியவாச்சானபிள்ளை அழகாக அரு ளிச்செய்த நிர்வாஹம் பரமபோகயமேயாம்.

மேற் குறித்தப்ரமாணங்களை தேசிகன் நயிபபிக்கபபுகுநது இவையெல்லாம் ப்ரசம்ஸாபரங்களென்று ஸ்தோத்ரபாஷ்யத்தி

‡ இதுதேசிகனாலும் ஸ்தோத்ரபாஷ்யத்தில் (42) உதாஹரிக்கப்பட்டது.

னும் கத்யபாஷ்யத்திலும் நிரவஹிக்கிருர். ஸ்வரூபயோக்யதையைச் சொல்லிற்றாகலாமென்று பெரியவாச்சான்பிள்ளை திருவுள்ளம் பற்றுகிருர் இத்தனையே வாசியுள்ளது. "சக்தியுண்டு, ப்ராப்தி இல்லை" என்ற பெரியவாச்சான்பிள்ளையின் ஸூக்தி அஸங்கதமென்று கருதியதூபபுலம்பான் "யதாவிபுஶக்திஶாலிநஃ தஜ்ஞாநேந்த்ரியஸ் ய ப்ரஸக்தா" [சக்தியுண்டானால் ப்ராப்தியில்லையென்னப் போகாது] என்று அவலீலையாகச் சொல்லிவைத்தார். "நித்யஸ்ய ஸர்வதேஶவ்யாபித்வே ஸமேனாவ்யாப்யநாவஸ்யம்ஸாவஃ" என்கிற நையாயிகநியாயத்தில ஊற்றமுற்றனா போலும்.

ஈஶ்வரவைபவம் ॥ சதுச்ச்லோகீபாஷ்யத்தில "காரணத்வ ஸிவ ஸர்வலக்ஷணம் த் வத்ரைகமேவார்வம்" என்றும் "யதா ஹி ஸர்வ ஸமஸ்த ஸார்வவ்யாபித்ரைலோக்யப்ரஸிங்கோபி ஜக்த்ய ஸாவஜக்ஷிதி லக்ஷணஸம்யக் தாராகார்ய ஸேவை ஷேஷத்வம் ஸாவக்யேத, தயா ஜனாவிஷவதி" என்றும் சொல்லிவைத்தவர் தாமே ந்யாயஸித்தாஞ்ஜநத்தில ஈச்வர பரிச்சேதத்தில் "ஜகஜ்ஜந்மஸ்திதித்வம் ஸாரண்யத்வமாப்யுத்தாதிஸாமர்த்யாஸ்து ஸார்வஜ்ஞம் நிஷேதோ வ்யக்த" என்று சொல்லிவைத்தார். பரஸ்பரவிருத்தமாக இங்ஙனேயுள்ளவற்றை ஸமரஸப்படுத்தப் புகுந்த பின்புள்ளார், ந்யாயஸித்தாஞ்ஜநவ்யாக்யாநமான ரத்நபேடிகையிலும் ஸ்ரீதத்வஸித்தாஞ்ஜநத்திலும் "ஶ்ரீநிஷ்டம் ஜகத்காரணத்வம் ஹி ஸர்வஜ்ஞத்வாதிஸர்வம் நத ஸமேவஹித வ்யாவர்த்தகம்" என்று எழுதி வைத்தார்கள். "சக்தியுண்டு, ப்ராப்தியில்லை" என்ற பெரிய வாச்சான்பிள்ளையின் நிர்வாஹமொழிய வேறொன்றும் சரணமாயிற்றில்லை

"நித்யஸ்ய ஸர்வதேஶவ்யாபித்வே ஸமேனாவ்யாப்யநாவஸ்யம் ஸாவஃ" என்ற நியமம் இப்போது எங்கே புக்கொளித்ததோ அறியோம்.

"முக்தாத்மாவுக்கு எம்பெருமானோடு பரமஸாம்யாபத்தியை வேதம் ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கச் செய்தேயும் 'ஜகத்வ்யாபாரவர்ஜம்' என்று வைஷம்யம் ஸ்தாபித்ததுபோல் பிராட்டி

விஷயத்திலும் அது ஸ்தாபிக்கபபடவேணும்" என்றுசதுச்ச்லோகீ பாஷ்யத்தில் தேசிகனருளிச்செய்தது பொய்யோ? ஜகத்காரணத்வ விஷயத்தில் இங்ஙனே வைஷம்யம் கொள்ளவேணுமென்ற இவர் தாமே 'ஜகத்காரணத்வத்தால் ஸாம்யங்கொள்ளவேணுமென்று ந்யாயஸித்தாஞ்ஜநத்திலருளிசசெய்தது பொய்யோ? இவ்விரண்டு ஸ்ரீஸூக்திகளையும் அவிருத்தமாக நயிப்பிக்கவேண்டி சதுசச்லோகீ பாஷ்யஸூக்தியை ஸ்ருஷ்ட்யாதிவ்யாபாராதிவிஷயத்தில் நோக்குடையதாகவும் ஸித்தாஞ்ஜநஸூக்தியை ஸ்வரூப யோக்யதாபரதிபாதநத்தில நோக்குடையதாகவும் நிர்வஹித்தார்க ளென்றது பொயயோ? பிராட்டியின ஜகத்வ்யாபார விஷயத்தில் முக்தர்களின் ஜகத்வ்யாபாரத்தை த்ருஷ்டாந்தீகரிதத தேசிகனுக்கு "ஜகத்வ்யாபாரவர்ஜம்" என்பது பிராட்டி திறத்தில் ஸம்மத மாம்போது முக்தர் திறத்தில் மாத்திரம் அஸம்மதமாயிற்றெங் ஙனேயோ? ஸங்கல்பஸூர்யோதயத்தில் காட்டின ஸூர்ய ஸாக்ஷிக ந்யாயமேகிடோ இங்குநினைவுக்கு வாராநின்றது.

இவவிஷயம்மாகவே சரணாகதிகத்ய பாஷ்யத்திலும் பேசும் போது "ஜகதாதாரத்வே ஜகந்நியாமகத்வே அதிஸ்வாதந்த்ர்யே ஸாதாரணம் ஸ்வஸாம்யம் நிரஸ்தம்" எனறு செருக்குடனுரைத்த தம விதோஷவிஜ்ரும்பித மென்னுமிடத்தைக் கீழ் விரித்த நிரூபணங்களைக் கொண்டு அறிஞர்கள் அறுதியிடக்குறையில்லை.

## மூன்றாம் விஷயம்.

"தவாம்ருதஸ்யந்திநி" என்கிற இருபத்தேழாம் ச்லோகத்தில் "நிவேசிதாத்மா" என்றபதத்தின் வியாக்கியானத்தில் பெரியவாச் சான்பிள்ளைக்கும் தேசிகனுக்கும் அணுமாத்ரமும் அபிப்ராய பேதம் இல்லாமலிருக்கச் செய்தேயும் பூர்வபக்ஷிகள் அஸ்தாநே பரமித்து இங்ஙனே எழுதுகிறார்கள்—"நிவேசிதாத்மா என்கிற பதத்திற்கு 'நிவேசிக்கப்பட்ட மனதானது' என்று மனதையே கர்த்தாவாகப பெரியவாசசான்பிள்ளை வியாக்கியானத்தில் அரு ளிச் செய்யப்பட்டிருக்கிறது இந்த பாஷ்யத்தில், அதில் ஏக தேசாநவயம் முதலிய அஸ்வாரஸ்யங்களை நினைத்து, 'வைக்கப் பட்டபுத்தியையுடைய நான்' என்று அருளிச் செய்யப்பட்டிருக் கிறது" என்று.

இந்த நிர்விஷயப்ரமத்தை நிரூபகர்கள் தாம் ஆராயவேண்டும். நிவேசிதாத்மா என்பதற்கு 'நிவெஶிதஸ்ஶாஸௌ ஆத்மாச' என்று காமதாரயஸமாஸம் விவக்ஷித்து, "தேவருடைய நிர்ஹேதுகமான ப்ரஸாதத்தாலே நிவேசிக்கப்பட்ட மநஸ்ஸானது" என்று மநஸ்ஸையே காத்தாவாக்கிப் பெரியவாச்சான்பிள்ளை உரைத்தது உண்மையே. தேசிகனும் தமது பாஷ்யத்தில் இவ்வர்த்தத்தையே தழுவி இங்ஙனமே உரைத்தருளினரேயன்றி வேறொரு பொருளை நெஞ்சிலும் நினைத்திலர். "[நிவெஶிதாத்மா]ரக்ஷணொபாயெந ஆஶ்ரிதொஹம் த்வ' ஐத்யர்த்திவாதிநா த்வயெவ ஸ்வஸ்ஶாவஸ்யாவஹிதா ஸ்யாஷிஷிதவ்யாக:." என்றிறே ஸ்தோத்ரபாஷ்ய ஸூக்தியுள்ளது. "வைக்கப்பட்ட புத்தியையுடைய நான்" என்று தேசிகனுரைத்திருப்பதாகப் பிறர்வரைந்திருப்பதற்கு அந்தோ! பாஷ்யத்தில என்ன ஆதாரமுள்ளது? இச்சதி என்கிற க்ரியாபதம் ப்ரதம புருஷனாயிருக்கும்போது, நான் என்று தன்மையாக உரையிடுதற்குரிய பரமம் பண்டிதபூஷணரல்லாதார்க்கு எங்ஙனே விளையும்?. தாம்மருண்டதோடு பிறரையும் மருள்விக்கமுயல்வது மிகவியப்பே. "த்வயெவஸ்வஸ்ஶாவஸ்யாவஹிதா ஸ்யாஷி:" என்ற மேற்குறித்த பாஷ்ய பங்க்தியில் காலை யொடித்தெறிந்து ஸமஸ்தபதமாக்கிக் கொண்டாலும நான் என்பது விசேஷ்யமாவதற்கு ப்ரஸக்தியுண்டோ? அப்போது இச்சதி என்ற படர்க்கையை யொழித்து இச்சாமி என்று தன்மையாகக் கொள்ளவேண்டியதாமிறே இனி, தாத்பர்ய விவக்ஷயா, 'நான்' என்றது என்று சொல்லப் பார்க்கில், 'தாத்பர்யதோ' என்று ஒழிந்திடுவோம் "ஸ்வஸ்ஶாவஸ்யா வஹிதஸ்யாஷி:" என்று ஸமஸ்தபதமாகச் சிலர் அச்சிட்டபடி பாடங்கொண்டாலும், கர்மதாரயப் பொருள் பொருந்துமேயன்றி பஹுவ்ரீஹ்யர்த்தம ஸமஞ்ஜஸமன்று மேல பங்க்திகளை நோக்கினால் இது நன்கு விளங்கும் பஹுவ்ரீஹியே தேசிகனுக்கு விவக்ஷிதமாகில ஸ்வய்யாஹாரமான கர்த்ருபதத்தை அத்யாஹரித்துக் காட்டி உரைத்திடவேண்டியிருக்க அங்ஙனமுரையாதது குற்றமாமிறே. இச்சாமி என்று உத்தமனாயிருந்துவிட்டால் அஹம் என்று அர்த்தாத்ஸித்தமாகும் இச்சதி என்று ப்ரதமனாயிருக்கையாலே ஏதேனுமொரு பதத்தை [புமாந் என்றோ ஜந: என்றோ] அத்யா

ஹரித்துக் காட்டவேண்டுமிறே அங்ஙனே ஒன்றும் காட்டாமை யாலும் கர்மதாரயப் பொருளே தேசிகனுக்கு விவக்ஷிதமென்பது திண்ணம் இன்னமும்; ஏற்கனவே பெரியவாச்சான்பிள்ளை அருளிசெய்யதிருக்கும் கர்மதாரயப பொருள் அஸம்பத்தமென்றும் பஹுவ்ரீஹயர்த்தம் சொல்வதே ஆவசயகமென்றும் தேசிகன் திருவுள்ளம்பற்றி யிருபபரேல இக்கருத்து ஸ்பஷ்டமாக விளஙகு மாறு பண்ணியுரைத்தே யிருப்பர். இங்ஙனே வசநவ்யக்தி விளைந் திராது.

கிம்பஹுநா? பஹுவ்ரீஹ்யர்த்தமே தேசிகன் திருவுள் ளம பற்றினது என்று பூர்வபக்ஷிகள் கருதினபடியே நாமும முழு மனமாகக் கருதியே விடுவோம் இங்ஙனே இருவர்கரும அபிப் ராயபேதமுண்டாய்த்தென்று கொள்ளில் குற்றமென்னே? இரண்டு படிக்கும் சாஸ்த்ரம் இடம் தந்ததாகில், யதாருசி பரிக்ரஹிக்கக் குறையென்? மேல் "ஸ்புரத் கிரீடாங்கத" என்ற (36) ச்லோகத் தில் "லஸத்துலஸ்யா வநமாலயோஜ்வலம்" என்றவிடத்து, லஸத்துலஸ்யா என்ற பதத்திற்கு, "ஸஶ்ரீவஸா துஸீவ" என்று கர்மதாரயமும், 'ஸஶ்ரீ துஸீ யஸ்யாஸா' என்று பஹுவ்ரீஹியும் ஆக இரண்டு ஸமாஸமும் சொல்லக்கூடியதா யிருக்கையாலே இங்குப் பெரியவாச்சான் பிள்ளை எங்ஙனே திரு வுள்ளம்பற்றினர் என்று ஆராய்ந்த தேசிகன், இரண்டுபடியும் அவருகந்ததேயென்று நுண்ணிதின் உணர்ந்து தமது பாஷ்யத் திலே அவ்விருவகையான ஸமாஸத்தையும் ஸ்பஷ்டமாக அருளிச் செய்தார். அங்கு இரண்டும் பொருந்துமாபோலே இங்கும் பொருந்தக் குறையொன்றுமில்லையே இனி உபயவரிஷ்ரஹமோ ஏகதராவரிஷ்ரஹமோ ஔசித்யமிறே அவரவர்களின் இச் சையே இதில் நியாமகமானபின்பு ஆக்ஷேபமென்? ஸமாதாந மென்?

லஸத்துலஸ்யா என்றெடுத்தவிடத்திற்கும் இவ்விடத்திற்கும் வாசியுண்டென்று சொல்லக் கனவிலும கருதவேண்டா. இங்கு ஏகதேசாந்வய மென்கிற சாஸ்த்ரதோஷம் உண்டென்று பூர்வ பக்ஷிகள் உரைத்திருககிறுரே; லஸத்துலஸ்யா என்றவிடத்தில் இந்த தோஷத்துக்கு ப்ரஸக்தியில்லையே; ஆனபின்பு வாசியுண்டே

யென்னில; பாதபங்கஜே நிவேசிதாத்மா என்ற இவ்விடத்தில் ஏக தேசாந்வயம் தோஷயென்று சாஸ்த்ரஜ்ஞ கோஷ்டியில் மீண்டும் வாய்திறக்கவேண்டா; சாஸ்த்ரவாஸனையைச் சிறிதுமறியாதார் பக்கலிலே இதனைச் சொல்லிக் குணலமாடலாமத்தனை.

இன்றுமக்கிந்த ரஹஸ்ய முரைப்போம், உணர்ந்து தெளிவீராக.

ஏகதேசாந்வயம் இருவகைபபடும் ஒரு விசேஷணபதம் ஸமஸ்தபதத்தின் ஏகதேசமானதொரு விசேஷ்யபதத்திலே அந்வயித்துப் பொருள்படுதல் ஒன்று. ஒரு விசேஷ்யபதம் ஸமஸ்த பதத்தின் ஏகதேசமானதொரு பதத்திலே அந்வயித்துப் பொருள் படுதல் மற்றொன்று இவற்றுள் முந்தினதற்கு உதாஹரணம்— "உமாஸக்தம் ஶோகவிநாஶகாரணம் நமாமி விக்நேஶ்வரபாதபங்கஜம்" என்பதாம் இங்கு உமாஸக்தம் என்ற விசேஷணபதம், மேல் ஸமஸ்தபதத்தின ஏகதேசமான விக்நேச்வரபதத்திலே அந்வயிக்க வேண்டியதாம் இந்த அந்வயம் சாஸ்த்ர தூஷிதம். சாப்த போதம் பிறக்கமாட்டாமையாலே அபபரயோகமென்று இகழப படும். இரண்டாவதான ஏகதேசாந்வயம் சாஸ்த்ராநுமதம் மஹா காவ்யங்களிலும் பூர்வாசார்ய ஸூக்திகளிலும் இது பெரும்பாலும் இடம் பெற்றேயிருக்கும்.

"ஸ்ரீரிதி விஷ்ணோரநந்யஸம்ஸ்ரயத்வம்" என்ற ஸ்ரீவைகுண்டகத்ய ஸ்ரீஸூக்திகாண்க. "விஷ்ணோ: பதாம்புஜயுகம் ஶிரஸா ப்ரபத்யே" என்று ஸ்ரீவைகுண்டஸ்தவத்திலே ஆழ்வானும் இங்ஙனே பரயோகித்தார விஷ்ணோ: என்ற விசேஷ்யபதம் மேல் ஸமஸ்தைகதேசமான பத சப்தத்திலிறே அந்வயிப்பது

அத்தனைதூரம் தேடவும் வேண்டா; இந்த ஸ்தோத்ரரத்நந் தன்னிலேயே "உதக்ரபீநாம்ஸ" என்ற (34) ச்லோகத்தில "ஶ்ரிய:" என்றபதம் ந்யக்க்ருத என்ற ஏகதேசத்திலிறே அந்வயிப்பது. இவர்தாம் அங்கு வாய்திறக்கவுமில்லையே. நிவேசிதாத்மா என்ற இவ்விடத்தில் மாத்திரம் என்ன அநர்த்தம் விளைந்திட்டதோ அறியோம். இங்கு கர்மதாரயஸமாஸம் கொண்டால் ஏகதேசாந்வய தோஷம் விளைகின்றதென்றும், பஹுவ்ரீஹிஸமாஸங்கொண்டால அது தணிகின்றதென்றும் கூறுமிவர் சாஸ்த்ரார்த்தங்கள் பயின்ற

வகை சாலவழகியதே எந்த ஸமாஸம் கொண்டாலும் பாதபங்கஜே என்ற பதம் 'நிவேசித' என்ற ஏகதேசத்திலே அந்வயியாமல் வேறெங்கு அந்வயிக்குமோ? அறிஞர்காள் ஆராய்மின். அவ்விடத்து பாஷ்யபங்க்தியும் "த்வயைவ ஜந்மாவஸாவிதவாழ்" என்ற பாடமாகவே உள்ளதாயின் த்வயா என்ற பதம் ஏகதேசத்திலே அந்வயியாதே வேறெங்கு அந்வயிக்கவல்லதோ? "மருதிறுத்தாய்! உன் வளர்த்தியோடே வளாகின்றதாலுன்றன் மாயை தானே" என்னுறபோலே விருத்துகளுடனே விசேஷ ஞானமும் வளர்கின்றது போலும்

"ஏகதேசாந்வயம் முதலிய அஸ்வாரஸ்யங்கள்" என்ற பூர்வபக்ஷிகளுக்கு "முதலிய" சப்தத்தாலே விவக்ஷிதமானவை இன்னம் எவையோ அறியோம். அதோஷமான இந்த ஏகதேசாந்வயத்தைப் பெரிய தோஷமாக நினைக்குமவர்கள் பஹுவ்ரீஹி பக்ஷத்தில் கதஜ்ரவஹாயஹாஹராதோஷம வலிதாக நிறகுமென்று நினையாததென்னோ?

இங்கே நினைவுக்குவந்ததொரு அற்புதமான விஷயம் மறைத்திட முடியாமையாலே விளம்பப்படுகின்றது கீழே நாம் இருவகையான ஏகதேசாந்வயங்களைக்காட்டி, விசேஷணத்திற்கு நேரும் ஏகதேசாந்வயம் ஸர்வாத்மநா சாஸ்த்ரதூஷிதமென்று நிரூபித்தோம். வ்யுத்பத்திவாதம். மஞ்ஜூஷா முதலிய சாஸ்த்ரநூலகளிலே இது நிர்விவாதமாக நிர்ணயிக்கப்பட்டதேயாம் இதில் மதபேதமென்பது யாதொன்றுமில்லை இஙஙனேயிருக்கச் செயதேயும், யதிராஜஸப்ததியிலே "ஹுவிர நிமஜ்ஜொஹாஜ்ஜெஹயா" என்றச்லோகத்திலே "ரஸவரிமஜ்ஜாவாவொஷஹ-த-ஜெஹ-நம்வணவணிஜ கவடிஜிராவடிம் கிஜிதஜிஜநதெ" என்று தேசிகன் பரயோகித்தருளினார் "கருபபூரத்தின் விலை உப்புவாணியனுக்குத் தெரியுமோ?" என்ற லோகோக்தியை இங்கு மொழி பெயர்த்துளர் இங்கு ரஸபரிமளேத்யாதி விசேஷணம் எப்பதத்தில அந்வயிக்கின்றதென்று நோக்கவேணும் 'கவடிஜிராவடிம்' என்ற விசேஷ்யபதத்திலென்னில்; கர்ப்பூரத்தின் விலைக்கும் ரஸபரிமளங்களுண்டாகவேணுமே. அவையுள்ளது கர்ப்பூரத்துக்கேயிறே. ஆகையாலே

அவ்விசேஷணம் ஸமஸ்தைகதேசமான கர்ப்பூரபதத்திலே அந்வயித்தாலன்றி விவக்ஷிதம ஸித்திக்க வழியில்லை வ்யாக்க்யாதாக்களெல்லாம் அப்படியே அந்வயித்தார்கள். இந்த ச்லோகந்தானே ஸங்கல்ப ஸூர்யோதயத்திலும் இரண்டாம் அங்கத்திலே அநுஸம ஹிதம். அங்கு தமிழுரையுரைத்த நம் பண்டிதபூஷணஸ்வாமி— "ருசி, வாஸனை இவைகளைப்பற்றிய ஸ்தோத்திரம்பண்ணுகிற கோஷத்திலை் பட்டணங்கள் பிளந்துவிடும்படியாக இருக்கிற பச்சைக் கற்பூரத்தின் விலையை உப்புவயாபாரிகள என்ன வென்று நினைப்பார்கள்" என்று அழகாக அருளிச் செய்து வைத்தார். பொருள் போக்கியமே; மூல சபதஸந்தர்ப்பமும் கம்பீரமே அந்வயம் அமைவது எங்ஙனேயோ? "உமாஸூதம் சோகவிநாசகாரணம் நமாமி 'விக்நேச்வரபாதபங்கஜம்" இத்யாதி ச்லோகங்களும் இனி ஸரஸாவாஹ்யமே போலும். அந்தோ! இங்கு மதிசெலுத்துவாரில்லையே. இவர்களுரைக்கும் பொருளை இந்த மூல முள்ள படியிலே சாஸ்த்ரீயமாகப பொருந்தவிடவல்லார முன்வருவரேல, வாணாள்முற்றும் அன்னவர் தாளிணையைச் சென்னிமேற்கொண்டு திரிவேன்.

கண்விழித்து நோக்கவேண்டுமிடத்தே கண்ணுறங்கிப்போய், நிர்மலமான நன்னெறியிலே மயங்கிநிற்பார்க்கு நமோநமஃ இதனினும்விஞ்சிய பரிஹாஸ்ய ப்ரஸங்கம் வேறொன்றில்லையென்று * வெள்கிப்போய்த் தம்முள்ளே தாம் விலவறச்சிரித்திடாரோ?

"நிவேசிதாத்மா" என்ற ப்ரக்ருதஸ்தலத்தில கர்மதாரய ஸமாஸமும் பஹுவ்ரீஹிஸமாஸமுமிரண்டும் பொருந்துமென்று சொன்னோம. எந்த ஸமாஸத்திலே ஸ்வாரஸ்யாதிசயமுளதென்று ஆராயில் கர்மதாரய ஸமாஸங்கொண்டு மநஸ்ஸைக் கர்த்தாவாக ஆக்கியுரைப்பதிலேயே அஃதுள்ளது. உத்தரார்த்தத்தில் மதுவ்ரதத்ருஷ்டாந்தம் காட்டியிருப்பதற்குச் சேர மநஸ்ஸுக்கே தார்ஷ்டாந்திகத்வம் இருக்கவடுக்கும் "நின்றவா நில்லா நெஞ்சு" என்றும் "சஞ்சலம் ஹி மநஃ க்ருஷ்ண" என்றும் சஞ்சலமாகச் சொல்லப்பட்ட மநஸ்ஸுக்கும், மலர்தோறும் நின்றவாநில்லாதே திரிந்து சஞ்சரீகமென்றே பேர்பெற்ற வண்டுக்குமேயிறே உவமையொத்திருப்பது. "போந்ததென்னெஞ்சென்னும் பொன்வண்டு,

உனதடிப்போதிலொண்சீராங் கெளிதேனுண்டமர்ந்திட வேண்டி ” என்ற இராமாநுச நூற்றந்தாதிப் பாசுரத்தையும் இங்கே இணைத்துக் கொண்டால பரமரஸமாகும் இவ்வளவு இனிமையான பொருள் ஸ்தோத்ர பாஷ்யத்தில விளங்காதிருந்தாலும் விளக்கிக் கொள்ள விரும்பவேண்டியிருக்க உளளதையும் அபலபித்து அவரை அரஸிக கோஷ்டியில் அந்வயிபபிக்க நோக்குவதே! என்று நோகின்றோம். ஐதஸ்யம்ஷிஷஹதஸ்ய ஐஹராஸிவாசெதந ॥

## —நான்காம் விஷயம்.—

“ த்வதங்க்ரி முத்திச்ய ” என்ற இருபதெட்டாம ச்லோகத்தின் வியாக்கியானத்தில் “ மநோவாக்காயங்கள் மூன்றுலும பண்ணின பரபத்தியெல்லாம் வேணுமோ ? காயிகமான அஞ்ஜலியொன்றே அமையாதோவென்கிறார் ” என்று பெரியவாச்சான் பிள்ளை யருளிச செய்திருபபதில தூஷணம் காட்டுகிறார் அஞ்ஜலிக்கு ஸாக்ஷாத் மோக்ஷ ஸாதநத்வம் பெரியவாச்சான்பிள்ளை திருவுளளமென்றும், பக்தி ப்ரபத்தி விதாயக சாஸ்த்ராந்தர வெயய்ய்ம் வருகையாலே பரம்பரயா மோக்ஷஸாதநத்வமே கொள்ளக்கடவதென்று தேசிகன் ஸ்தாபித்தாரென்றும் ஸம்பரமித்தழுதுகிறார்கள். இவ்விஷயத்தை இங்கே நாம் சுருக்கமாக முடித்துக் கொள்வோம்

அஞ்ஜலிக்கு ஸாக்ஷாத்மோக்ஷோபாயத்வம் சொல்லவொண்ணுதென்று ஸ்தோத்ரபாஷ்யத்திலே தேசிகன் அதிகமாகச் சில ப்ரஸங்கங்கள் செய்தருளியிருப்பது உண்மையே. இந்த ப்ரஸங்கங்கள் பெரியவாச்சான்பிள்ளையின் ஸ்ரீஸூக்தியின்மேல் நோக்காக அவதரித்தவையல்ல. பட்டர் ஸஹஸ்ரநாமபாஷ்யத்தின் உபோத்காத ப்ரகரணத்திலே—

“ நநு ப்ராப்தீவைக்ஷாந்தவஸ்ஸாயிவிசேஷா ரேவ ஸஹாயஸாபேக்ஷாய தத்ஜ்ஞாநாவக்ரஸ்ய வாஜாத்ஸாய த்வாசொவ்யதிவாக: । ப்ராப்ஸாஸ்ரவெயய்ய்ஸ்வஸஂசெந ஸ்ரஸா ணவிநாப்யஂவ. (இதிசேத்.) தநிதஂ ஸவிநிதஜபவத்ஜாவஸ்ய உமாஜவஸஸ்ய செவஸாவஂ । ஸவீயொவி ஜபவத்ஸஂகீதநஂ

उपलक्षणमपि भावं भावयत्येव । न मामपि शास्त्रानय-
क्यं ; तस्य सर्वाधिकारत्वात् । तस्य च सत्वसतिवा
सात्त्विकं भगवद्विषयानुभवविशेषितं भाग्यवदधिका
रत्वात् गरीयसोऽपि भगवत्स्वरूपस्य भक्तेः श्र
यसि किंज्ञानवारितः ? यथा च गरीयसि श्रेयोमन्वेषण
श्रोतॄणः श्रुतिरिति, तथा श्रीयसमपि सावशेषविशेषा
त्वविदेकः । ”

என்று விரிவாக அருளிச செய்தவறறையே குறிக்கொண்டு தேசிகன ப்ரஸங்கித்தாரென்பது ஸ்பஷ்டம். ஸ்தோத்ர பாஷ்ய பங்க்திகள் அஞ்ஜலிவிஷயமென்றும், ஸஹஸ்ரநாமபாஷ்யஸூக்திகள் திருநாமஸங்கீர்த்தநவிஷயமென்றுங்கொண்டு அதற்கு மிதற கும் யாதொரு ஸம்பந்தமுமிலலை யென்பார் ஆராய்ச்சி யில்லாதார "திருநாம ஸங்கீர்த்தநத்திற காட்டிலும் மிகசசிறந்தது அஞ்ஜலி" என்று தேசிகனருளிச செயதமை காண்மின். அன்றியும் ஸ்தோத்ரபாஷ்யத்தில "நந. ப்ராயநுகூலேத யஜநுயஜேதூ:" என்றுதொடங்கி நாமஸங்கீர்த்தந விஷயமாகச் சோதிவாய் திறந்து மருளிச செயதார் அவ்விடத்திலே பட்டர் ஸூக்திக்கும் தேசிக ஸூக்திக்கும் பொருத்தம குறையறறதேயென்னில், அது பெரிய வாசசான்பிள்ளை ஸூக்திககு மொக்குமாய்த்து. விரோதோதபாவ நமே அபரஸக்தமென்றொழிக. வாஸுதேவஸ்ஸர்வம் வித்வான்:.........*

## —ஐந்தாம் விஷயம்.—

மம நாத ! யதஸ்தி என்கிற ஐம்பத்து மூன்றும் ச்லோக வியாக்கியானத்தில பெரியவாச்சான்பிள்ளை ஆத்ம ஸமர்ப்பணத்தையும் ஆத்மாபஹாரதுலயமாக அருளிச் செய்துவிட்டாராம்; இதில் சாஸ்த்ரார்த்தங்களெலலாம வியாகுலங்களாய விடுகின்றனவாம். "அஹமத்யைவ மயா ஸமர்ப்பிதஃ" என்று கீழ்ச்லோகத்திற் பண்ணின ஆத்மஸமாப்பணத்திற்கு, "மம நாத !" என்கிற இந்த ச்லோகம் அநுதாபப்ரகாசகம் என்று பெரியவாசசான்பிள்ளை உரைத்தருளினது சாஸ்தரவிருத்தமாம். இது கீழ்ச்லோகத்திற்கு விவரணமென்று தூப்புல்பிள்ளை நிர்வஹித்ததே பொருத்த

முடையதாம். சாஸ்த்ரஜ்ஞர்கட்குச் செவ்வனே தெளிவு பிறக்கு மாறு இங்கே பன்னியுரைப்போம்.

கீழ்ச்லோகத்திற்பண்ணின ஆத்ம ஸமர்ப்பணத்தைப்பற்றி இந்தச்லோகத்தில் அநுதாபப்படுகிருரென்று பெரியவாச்சான் பிள்ளை உரைத்தருளினவிதில குற்றங்குறை இறையுமிலலை "ஆத்ம ஸமர்ப்பணத்திற்கு அநுதாபபபடுகிருரென்று கொண்டால அநு தாபயோக்யங்களான பாபங்களைபபோலே ஆத்மஸமர்ப்பணமும் ஒரு பாபந்தானே; அது செய்யக்கூடாத காரியம் என்று ஏற்பட்டு விடாதா ?" என்பது பூர்வபக்ஷிகளின் ஆக்ஷேபம் இதற்கு இட மறும்படி பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்வது பாரீர்;— "[தே கிம் நு ஸமர்ப்பயாமி ?] இத்தையுடைய உனக்கு எத்தை ஸமர்பபிப்பேன் ? ஸமர்ப்பணீயமேது ? ஸமர்ப்பகா ஆர ? ஸமர்ப் பணீயமாகைக்கு ஸ்வாம்யமில்லை; ஸமர்பபிக்கைக்கு ஸ்வாதந் திரியமில்லை; ஸம்ஸாரபீதியால் ஸமர்ப்பிக்கையும் ஸ்வரூபயாதாத்ம் யஜ்ஞாநத்தால் அநுசயிக்கையுமிரண்டும் யாவந்மோக்ஷம் அநுவர்த் திக்கக் கடவது." என்ற ஹ்ருதயஹாரியான ஸ்ரீஸூக்தியைக் காண்மின் பெரியவாச்சான்பிள்ளையின் ஆழ்ந்த அழகிய இக் கருத்தை க்ரஹிக்ககில்லாத தூபபுலம்மான் தம்முடைய பாஷ்யத் திலே சில ஸூக்திகளைக் காடுமோடு பாயவிட்டார். ஆத்மஸமர்ப் பணத்தை மறுப்பதாகப பொருள்கொணடார்; பெரியவாச்சான் பிள்ளை திருவுள்ளம் அங்ஙனில்லையாயிருக்க, எதுகொண்டு ப்ர மித்தாரோ அறியோம். ஆத்ம ஸமர்பபணம் பண்ணுகையும், பண் ணினதற்காகப் பிறகு அநுதாபம் காட்டுகையும் ஆகவிரண்டும் இவ்விபூதியில் மாறிமாறி நடநதே தீரும் என்றருளிச்செய்திருக்க, "உக்ஷூ வ-ிவ-க்ஷுதவூா-ிவலஉவ-ணா நா-ஶயெ ந தஜெவ வூ-திக்ஷிவ-தஇதி வக்ஷஹூ-" என்று தேசிகன் அநுவதிபபது ஆதாரமுடையதோ ?

ஆனல், கீழ்ப்பண்ணின ஆத்ம ஸமர்ப்பணத்திற்கு இதனுல அநுதாபப்படுவதாக வியாக்கியானஞ் செய்யலாமோ ? தப்பான காரியத்துக்கன்றே அநுதபிக்கவேண்டுவது—என்று கேட்பீர்கள். கேண்மின்; கீழே முப்பத்திரண்டாவது ச்லோகம் முதல் நாற்

பத்தாரும் ச்லோகமளவும் பதினன்கு ச்லோகங்களாலே பகவானுடைய நித்ய கைங்கர்யத்தைப் பரமபுருஷார்த்தமாக ப்ரார்த்தித்தவர்தாமே அடுத்த (47) "யிமஸூவிஜவிநீதம்" என்கிற சலோகத்தால், கீழ் அப்படி ப்ராாததித்ததற்கு மஹத்தான அநுதாபத்தை மூலத்திலேயே ஆவிஷ்கரித்தாரே; அஃது என்னவென்று ஆராய்ந்தீர்களோ? கைங்கர்ய ப்ரார்த்தனை கூடும் என்றோ கூடாது என்றோ எங்ஙனே நிஷ்காஷிக்கின்றீர்? கூறுமின் கூாமதியீர்!.

ஸ்ரீ தேசிகன் தாமும் சரணாகதி தீபிகையெனனும் தீபப்ரகாச ஸ்தோத்ரத்தில் (41.) "ஜ்ஞூ்ஹம் துஜெகுஸாவெெண ர நவெெவாவா வெ௱ு துக்திஂகூர துவிஸவெ ஷூஜஹயாவாராய௱ு" என்று—பகவத் கைங்கர்யத்தை ஆசைபபடுவது மஹாபராதம் என்று வாய்விட்டருளிச்செய்கிறார் கைங்கர்யப்ராாததனை அபராதகோடியில அநுபவித்ததாகில் "நித௱ுகிஂகரொ ஹவாநி" என்கிற ப்ரார்த்தனை எங்ஙனே கூடும். தப்பான காரியமென்று நிாணயிககபபட்டபின் அதனை புத்திபூர்வகமாகச் செய்யலாமோ? ஸகல சாஸ்த்ர தத்வஜ்ஞரான தாம் "ஸ்ப்ருஹயா அபராத்யந்" என்றதற்கு முன்னும் பின்னும் பலகால கைங்காய ஸ்பருஹை பண்ணிபபோந்தது எங்ஙனே? "உலகுபடைத்துண்ட வெந்தை, அறைகழல் சுடர்ப்பூந்தாமரை சூடுதற்கு, அவாவாருயிருருகியுக்க, நேரியகாதலன் பிலின்பீன் தேறல், அமுதவெள்ளததாணஞ் சிறபபு" என்று (திருவாசிரியத்தில்) பரமப்ராப்யமாகப் போற்றப்பட்ட கைங்கர்ய ப்ரார்த்தனையை அபராத கோடியிலே நிறுத்திப பேசலாமோ தேசிகன் பூர்வபக்ஷிகள் பெரியவாசசான்பிள்ளை ஸ்ரீஸூக்தியில பண்ணும் சோத்யங்களெல்லாம் முந்துறமுன்னம் இது தன்னில்பண்ண ப்ராப்தம். சாஸ்த்ரங்களில் விஹிதமான கைங்கர்ய ஸ்ப்ருஹை பாபமாயிற்றாகில, ஆத்மஸமர்ப்பணமும் அங்ஙனே பாபமாகக் குறையென்னோ? அதற்குச் சொலலும் ஸமாதானங்கள் இதற்கும் ஒக்குங்கிடீர்.

அகில ஹேயப்ரத்யநீக கல்யாணைகதாநனை பரமபுருஷனை நாம் நெஞ்சால் நினைப்பதும் வாயால் ஏத்துவதும் உடலால் தீண்டப்பார்ப்பதும் மஹாபாபம்! அவத்யம்! நிறக்கேடு! என்று ஒரு

புறத்தில் அருளிச்செய்கிற ஆழ்வார்களும் ஆசாரியர்களும், மற்றொரு புறத்தில் அவற்றையேசெய்து 'இல்லையெனக்கெதிரில்லையெனக் கெதிரில்லையெனக் கெதிரே' என்று கனிந்து களித்துக் குலைமாடவும் காண்கிறோம்; இவை ஒன்றுக்கொன்று அபவாதமாகுமோ? இவையெல்லாம் பரஸ்பரவிருத்தம்போல் தோற்றினாலும உண்மையில் விருத்தமன்றே இரண்டுபடிகளும் சொல்லித் தீரவேண்டியவை யத்தனையிறே அதுபோல, முந்துற ஆத்மஸமர்ப்பணம் பண்ணுவதாகவும், பின்பு அதற்கு அநுதபிப்பதாகவும் பாசுரமிடுகை சாஸ்த்ரார்த்தம் என்று அறுதியிட்டபின் விளையுங் குற்றமென்கொல்?

கீழ்ச்லோகத்திற்கு விவரணமாகப் பிறந்தது இந்த ச்லோகம் என்று அருளிச்செய்கிற தேசிகன் திருவுள்ளமும், அநுதாப பரமாக வியாக்கியானித்தருளுகிற பெரியவாச்சான்பிள்ளை திருவுள்ளமும் பர்யாயதஃ ஒக்குமேயன்றி வேறுபடாது ஆத்மாத்மீயங்களெல்லாம் எம்பெருமானுடையதேயென்று ஸ்தாபிப்பதேயிறே 'மமநாத யதஸ்தி' இத்யாதி அருளிச் செய்கிற ஆளவந்தாருடைய திருவுள்ளம். இதனையே இரண்டு வ்யாக்க்யாதாக்களும் இரண்டு வழிகளாலே விளக்காநின்றார்கள். இருவருடைய லக்ஷ்யமும் ஒன்றேயாகையாலும், சாஸ்த்ரார்த்தத்தில் விப்ரதிபத்தியில்லாமையாலும் மதபேதமென்பது இதில் இல்லை. "எனதாவிதந் தொழிந்தேன்" என்றும் "பேருதவிக் கைம்மாறாத் தோள்களையாரத் தழுவியென்னுயிரை அறவிலை செய்தனன்" என்றும் ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணினதாகவே அருளிச்செய்கிற ஆழ்வார் தாமும் "உதவிக் கைம்மாறு என்னுயிரென்னவுற்றெண்ணில், அதுவுமற்றாங்கவன் தன்னது,......எதுவுமொன்றுமில்லை செய்வதிங்குமங்கே" என்று ஆத்மஸமர்ப்பணம் செய்திலராகவும் பேசுகிறார். இவை பரஸ்பரவ்யாஹதமென்னலாமோ? 'ஆத்மாத்மீயமெல்லாமவனுடையதே' என்கிற ஸ்தாபநத்திற்கு எங்குங்குறையில்லையென்னுமத்தனையிறே ஸாரம் இந்த ச்லோகத்தை அநுதாபபரமாக வுரைத்திட்டால் மஹாநர்த்தம் விளையுமென்று ஸ்தோத்ரபாஷ்யத்தில் கருதினவர்தாமே ரஹஸ்யத்ரயஸாரத்தில் பேசும்போது ஸாங்கப்ரபதநாதிகாரத்திலே—"இதுக்குமேல் மமநாத

யதஸ்தி என்கிற சலோகத்தில் இஸ்ஸமர்ப்பணத்தைப பற்ற அநு சயம் பண்ணிற்றும்" என்று பெரியவாச்சான்பிள்ளை திருவுள்ளத் தையே போரபபொலியத் தழுவியருளினர்

இவ்வாளவந்தார் தாம் ஏற்கனவே சிறந்த விவேகியாகையாலே கீழ்ச்லோகம் சொல்லும்போது அவிவேகியாயிருந்து இந்த ச்லோ கத்தில் உட்கண் விழித்துக்கொண்டாரென்கை ஒண்ணாது என்று ஸ்தோத்ரபாஷ்யத்தில் கூறுகின்றாரே ; ஜஞாதாக்கள் இப்படியுங் கூறலாமோ? க்ரமேண சாஸ்த்ரார்த்தங்களை வெளியிட வேண்டு மிடத்து இங்ஙனேயிறே சொல்லிக்கொள்ளவேண்டுவது "ப்ர புத்தத்ீ:" என்று ஆளவந்தார்தாமே சொலலிவைத்த சொல்லோ? பெரியவாச்சான் பிள்ளை நுழைத்த சொல்லோ? அதற்கு இவர் தம்மாலும் வேறு பொருள் சொலலப்போகாதிறே. இன்பமிகு மாறாயிரமருளிசசெய்த திருக்குருகைப்பிரான்பிள்ளானும் எனதா வியுள் கலந்தபாசுர வியாககியானத்தில்—" இபபடி எம்பெருமா ளோடுகலந்த கலவியாலுள்ள நிரவதிகப்ரீதியாலே அறிவழிந்து, இவ் வாத்மா தம்முடைய தன்றென்று நிரூபிக்கமாட்டாராய், அவன் தம மோடுகலந்த இபபெருநல்லுதவிக்குக் கைம்மாறாகத் தம்முடைய ஆத்மாவை அவனுக்கு மீளாவடிமையாகக் கொடுத்து, பின்னையும் தம்முடைய ஸ்வரூபத்தை உள்ளபடி விவேகித்து" இத்யாதி அரு ளிச் செய்தார் அந்த ஸ்ரீஸூக்தியையும் திரஸ்கரிக்கக் கருதுகின் றனர் போலும் மயர்வற மதிநல மருளப் பெற்றவர்க்கு ஒரு கால் விவேகமிலலையாகவும் ஒருகால் விவேகம் உத்பவித்ததாகவும் பிள்ளானுரைத்தது பொருந்துமாகில் இதுவும் பொருந்தத் தட் டுண்டோ?

"தந்த நீ கொண்டாக்கினையே" என்ற ஆழ்வாரைப்போலவே ஆளவந்தாரும் அருளிச செய்திருப்பரேல் மமநாதேத்யாதி ச்லோ கம் கீழ் ச்லோகத்திற்கு விவரணமென்னப் பொருந்த ப்ராப்தமாம் வசநவ்யக்தி அங்ஙனில்லைகிடீர் 'அதவா' என்றதையும் "கிம் நு ஸமர்ப்பயாமி" என்றதையும் ஊன்றி அநுஸந்திக்கில் ஸ்வாரஸ்ய முணர்வீர் ஆழ்வாருக்கு ப்ரமமும் அநுசயமும் கூடுமென்றும் ஆளவந்தாருக்கு அவை கூடா என்றும் அரும்பதவுரைகாரர் எழுதிவைத்ததும் ஊ-ஃஸம்ஹ-ஃஸாஃ-ாஜ்ஃமே.

நம் ஆழ்வாராசார்யர்களின் ப்ரமங்கள் கர்மோபாதிகமன்றிக்கே ஜ்ஞாநவிபாக கார்யமாகையாலே அடிக்கழஞ்சு பெறுமென்னும் திவ்யார்த்த ஸௌரபம் * எதிவரனார் மடைப்பள்ளிவந்த மணத்திலே அந்வயிக்கப் பெற்றதில்லை போலும்............*

## ஆறும் விஷயம்

“நநு ப்ரபந்நஸ் ஸக்ருதேவ நாத !” என்கிற அறுபத்தினன்காம் ச்லோகத்தில் ‘ஸக்ருதேவ’ என்பதற்கு ‘சீக்கிரத்தில’ என்று அர்த்தம் பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்திருக்கிறாராம்; தேசிகன் அதனை மறுத்திருககிறாராம். ‘ஒரு தடவை’ என்கிற அர்த்தமே ஸ்வாரஸ்யமுடையதாம். இந்த ப்ரமத்தையும் பரிஹரிப்போம்

“ஸக்ருதேவ ப்ரபந்நாய” என்கிற ஸ்ரீராமசரமச்லோகத்தை நம் பூர்வாசார்யர்கள் ரஸமாக உபந்யஸித்தருளும்போது ஒவ்வொருவர் ஒவ்வொருபடியாக நிர்வஹித்து அருளிச்செய்தார்கள். “ஸக்ருத்ஸஹைகவாரயோ:” என்கிற வசநபலத்தாலும் மற்றும் நிகண்டுபலத்தாலும் ‘ஸக்ருத்’ என்னுமவ்யயத்திற்குப் பல பொருள்களுண்டாகையாலே ‘ஸஹஸா’ என்பதான பொருளையும் திருவுள்ளம்பற்றி ஆழ்வான் நிர்வஹித்ததாகவும், எம்பார் ஒரு வகையாகவும் பட்டர் ஒருவகையாகவும இப்படி ஒவ்வொன்றிலே ஒவ்வொருவர் ஸ்வாரஸ்யத்தைத் திருவுள்ளம்பற்றி நிாவஹித்ததாகவும் தனிசலோக வியாக்கியானத்திலே பெரியவாச்சான்பிள்ளை விரித்துரைத்தருளினர். “நநு ப்ரபந்ந:” என்கிற ஸ்தோத்ர ரத்ந ச்லோகத்தின் வியாக்கியானத்திலும் அந்த நிர்வாஹங்களை ஸங்க்ரஹித்துள்ளார். “ஸஹஸைவ என்று ஆழ்வான் நிர்வஹிக்கும்” என்று அருளிச்செய்துளர் இதில தூஷண ப்ரஸக்தி ஸம்பந்தித்வம் பெரியவாச்சான்பிள்ளைக்கு இல்லை; ஆழ்வானுக்கே உள்ளது. கைவலய விஷயத்தில் எம்பெருமானார்க்கும் அஞ்ஜலி விஷயத்தில் பட்டர்க்கும்போலே இவ்விஷயத்தில் ஆழ்வானுக்கு ஸத்காரம் நேர்ந்ததுக்ரமப்ராப்தமேயாம் ஸக்ருத் என்பதற்கு ‘ஒருகால்’ என்னும பொருளை உபேக்ஷித்தாராருமில்லை. ஒரு பதத்திற்கு ஒரே இடத்தில் ஒரே பொருள்தான் கொள்ளலாமென்கிற நிர்ப்பந்தமில்லை.

சிசுபாலவத மஹாகாவ்யத்தில இரண்டாம் ஸர்க்கத்தில் (43) "உநாமநஹூாவாதூாவா" என்ற ச்லோகத்தில் "க்ரியாஸமபி ஹாரேண" என்பதற்கு 'மிகவும' என்கிற பொருளையும், 'அடிக்கடி' என்கிற பொருளையும் ஏகப்ரயோகத்திலேயே கொள்ளுமாறு மல்லிநாதர் உரையிட்டு, 'இப்படி கொள்வது குற்ற மன்று' என்றும் ஸ்தாபித்தார் அன்றியும், கவூாஸு திக்குப் பொருள் கொள்ளாநின்ற ஸ்ரீபாஷ்யகாரர் ஏகப்ர யோகத்திலேயே மூன்று வகையான வ்யுத்பத்திகளைச் செய்து மூவகைப் பொருள்களைக்கொண்டு "ஹம்ஹீராம்ஹூஷூஉகூெத, ஸஜூஷ நாஉ, ஈவிகாஈவிகவிெத, வணாீகஉஊாஉாயஜெத க்ஷணோ" என்று அருளிச்செய்ததை வேதார்த்த ஸங்க்ரஹத்திலும் அதன் தாத்பர்ய தீபிகையிலும காணலாம் அதுபோலவே ஸக்ருத் என்பதற்கும் ஏகப்ரயோகத்திலேயே பல பொருள்களை இசைத்து உபந்யஸித்த ஆழ்வான் வூஹூதிகளை அஸ்வரஸவாதிகளென்பார் அரஸிகர்கள்.

"ஸக்ருதேவ நாத!" என்றவிடத்தில நாத! என்பதற்கு வியாக்கியான மருளாநின்ற பெரியவாச்சான்பிள்ளை "ஒருகால பண்ணின ப்ரபத்தி அமைகிறது வருத்த நாதனுகையாலே" என்றருளிச் செய்திருப்பதை நோக்கினால் 'ஒருதடவை' என்கிற அர்த்தத்தை விட்டொழியாமை நன்கு விளங்கும். ஆகையாலே இவ்விடத்து ஸ்தோத்ரபாஷ்யபங்க்திக்கும் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியான ஸூக்திக்கும் உவிஷூஉவிஷகஹாவஹூஹணம் ஹூஉநிஸம்ய நமே யன்றி வாஸ்தவமன்றென்பதை மத்யஸ்தர் உணர்வார்கள். தாம் பேணும் வழியொழியப பூருவர்களின் வழி ஆகாதென்று கொண்டு ஒவவொரு மூலையிலே ஒவவொரு மஹானுடைய ஸ்ரீஸூக்திக்கும் குற்றங்குறை கூறிவைக்கும் ஸ்வதந்த்ரருடைய ஸூக்திகள் பம விலக்ஷணமென்பதும் உணரற்பாலது. பேசிற்றேபேசும் ஏககண்டரான ஸதாசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளில் தோஷோத்பாவநம் பண்ணப் பார்ப்பார்க்குக் கனவிலும் ஸமீஹிதஸித்தி எளிதன்று. ஆகவே, ஸ்தோத்ரரத்நத்திற்குப் பெரியவாசசான்பிள்ளை இட்டருளின வியாக்கியானம் * எந்தையெதிராச ரின்னருளுக்கென்று மிலக்காகிச் சதிராக வாழ்ந்திடுவார்க்குத் தேனேபாலே கன்னலே யமுதே

